# ஸ்ரீராமாநுஜன் 157.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 14 | 31—1—1962<br>பிலவ-ஹு தைமீ | ஸஞ்சிகை 1. |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—47

நோற்ற நோன்பாதியிலேன் உன்றனைவிட்டாற்றகில்லேன் *
பேற்றுக்குபாய முன்றன் பேரருளே—சாற்றுகின்றேன் *
இங்கென் னிலையென்னும் எழில்மாறன் சொல்வல்லார் *
அங்கமரர்க் காரா வமுது.

| | | | |
|---|---|---|---|
| நோற்ற | ஸாதாநாநுஷ்டானம் பண்ணிப் பெறப்பட்ட | இங்கு | இவ்விஷயத்தில் |
| நோன்பு ஆதி | கருமயோகம் முதலானவற்றை | என் நிலை என்னும் | என்னுடைய உறுதி இதுவாயிருக்கும் என்றருளிச் செய்தவரான |
| இலேன் | உடையேனல்லேன் ; | எழில் மாறன் | அழகிய ஆழ்வாருடைய |
| உன் தனை விட்டு | தாரகனாய் போக்யனாயிருக்கிற வுன்னை விட்டு | சொல் | திருவாய் மொழியை |
| ஆற்றகில்லேன் | தரித்திருக்க சக்தனல் லேன்; | வல்லார் | ஓதவல்லவர்கள் |
| பேற்றுக்கு | புருஷார்த்த ப்ராப்திக்கு | அங்கு | திருநாட்டுக்குச் சென்ற பின்பு |
| உபாயம் | சாதனம் | | |
| உன் தன் | உன்னுடைய | அமரர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| பேர் அருளே | பரமகிருபையே (என்று) | ஆரா அமுது | ஆராத அமுதமாயிருக்கப் பெறுவர், |
| சாற்றுகின்றேன் | துணிந்திருக்கின்றேன் ; | | |

*** எம்பெருமானே ! உன்னுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்திற்கு இடையூறாக உபாயாந்தரங்களில் தலையீடு உடையேனல்லேன் ; உன்னுடைய நிர்ஹேதுக க்ருபையே ஸாதனம்! என்கிற மஹாவிச்வாஸ முடையேன் ; இதுவாயிற்று என்னுடைய நிஷ்டை—என்று தம் உறுதியை * நோற்ற நோன்பிலேன் என்கிற திருவாய்மொழியில் விண்ணப்பஞ் செய்தவரான ஆழ்வாருடைய திவ்யஸூக்திகளை ஓதவல்லவர்கள் இவ்விபூதியில் ஸாம்ராஜ்யங்களையநுபவித்த பின்பு பரமபதத்திலும் நித்யமுக்தர்களாலே மிகவும் கொண்டாடப் பெறுவர் என்கை.

*நோற்ற நோன்புக்குக் கீழ்ப்பதிகமான * கடல்ஞாலஞ் செய்தேனு மென்கிற திருவாய்மொழியில் ஆழ்வார் எம்பெருமானாகவே தம்மை அநுகரித்துப் பேசினது ஒருவாறு தரிக்கைக் காகவன்றோ ; அவ்வளவிலும் எம்பெருமான்வந்து முகங்காட்டாமையாலே பழைய ஆர்த்தியே தலையெடுத்தது. 'சிறிது ஆர்த்தியுண்டானாலும் கடுகவந்து முகங்காட்டி அருள் செய்வதையே இயல்வாகவுடைய எம்பெருமான் நம்மளவிலே இப்படி உபேக்ஷையாயிருக்க யாது காரணம்?' என்று பார்த்தார் ஆழ்வார். கருமயோகம் ஞானயோகம் முதலானவற்றிலே நமக்கு அந்வயம் வேணுமென்று இருந்தானோ ? அல்லது அந்த உபாயாந்தரங்களில் நாம் அந்வயித்திருக்கிறோமென்று திருவுள்ளம் பற்றிக் கைவிடப் பார்த்தானோ ? அவனது திருவுள்ளம் இன்னதென்று தெரியவில்லையே! என்று தடுமாறின ஆழ்வார் தம்முடைய உண்மையான நிலைமையை எம்பெருமான் திருவடிகளிலே விண்ணப்பம் செய்யவேணுமென்று கருதி வானமாமலைப் பெருமாள் திருவடிகளிலே தம்முடைய அநந்யோபாயத்வம் முதலானவற்றை விண்ணப்பஞ்செய்து வேரற்ற மரம்போலே விழுந்து சரணம் புகுகிறாராயிற்று * நோற்ற நோன்பிலேனென்னும் பதிகத்திலே. .... ... ... (47)

# ஸம்வத்ஸராரம்ப விஜ்ஞாபனம்

நமது ஸ்ரீ ராமாநுஜன் பதின்மூன்று பிராயங்களை இனிது கடத்திப் பதினான்காவது பிராயத்தில் அடிவைக்கும் நாள் இன்று. உலகில் அவரவர்கள் ச்ரேயஸ் ஸுக்களையடைந்து ஆனந்திப்பதற்கு ஹேது பகவத் பாகவதாசார்ய கடாக்ஷமேயென்பது யாவருமுணர்ந்ததும் இசைந்ததுமாம். நமது ஸ்ரீ ராமாநுஜன் குறையற்று மேன்மேலும் அபிவிருத்தி பெறுவதற்கும் அந்தக் கடாக்ஷமே ஹேதுவென்பது புநருக்தம். இந்நாள் வரையிலும் போலவே எந்நாளும் அந்தக் கடாக்ஷம் கொழுந்துவிட்டு வளருமென்பதில் ஐயமுண்டோ? முதலிலிருந்தே நிர்ஹேதுகமாகப் பெருகத் தொடங்கி வளர்ந்து வாராநின்ற இக்கடாக்ஷத்தை நாம் பிரார்த்திப்பது மிகையாகும். ஆனாலும் புருஷார்த்தமாக வேண்டியதற்காகவும் நம்முடைய சைதந்யம் ஸபலமாவதற்காகவும் நாமும் சிறிது பிரார்த்திக்கிறோமதனை.

இப்பத்திரிகையில் வெளிவரும் விஷயங்கள் யாவும் ஆஸ்திக வைதிகர்களுக்கு அதிமாத்ரம் ஆனந்த ஸந்தாயகமாயிருக்கின்றன வென்னுமிடத்தை அடிக்கடி ஆப்தர்கள் அருளும் திருமுகங்களினாலறிந்து அகமகிழ்கின்றோம். இந்த நிலைமை மேன்மேலும் அபிவிருத்தியடைந்து செல்லுமென்பதை நாம் விஜ்ஞாபிக்கவேணுமோ?

எம்பெருமான் தன்னுடைய அவதார ப்ரயோஜனங்களைப் பேசுமிடத்து "பரித்ராணாய ஸாதூநாம்" என்ற வளவோடு நில்லாமல் "விநாசாய ச துஷ்க்ருதாம்" என்றும் பேசினபடியாலே ஸன்மத ஸ்தாபனத்தோடு கூட துர்மத நிரஸனமும் ப்ராப்தமேயென்கிற அத்யவஸாயத்தினால் நமது ஸ்ரீ ராமாநுஜனில் ஸன்மத ஸ்தாபன பரங்களான வியாஸங்களோடு கூட துர்மத நிரஸன நிபுணங்களான வியாஸங்களையும் ஊடேயூடே வெளியிட்டு வந்திருக்கிறோம். எந்த விஷயத்திலும் விவக்ஷிதங்களும் வக்தவ்யங்களுமான அம்சங்கள் சேஷித்திருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே பரமத நிரஸன பரங்களான வியாஸங்கள் இப்பத்திரிகையில் இடம் பெறுவது தவிர்ந்து பல நாளாயிற்று. இனிமேலும் அந்த பத்ததியே பரிபாலிக்கப்பட்டுவரும்.

இக்காலத்தில் பத்ரிகை நடத்துவதிலுள்ள சிரமத்தை அறியாதாரில்லை. அந்த சிரமம் சிறிதும் தோன்றாமலிருப்பதற்கு முக்கிய ஹேது இன்னதென்பதை நாம் விஜ்ஞாபிக்க வேணுமோ? அவரவர்கள் செலுத்த வேண்டிய சந்தாத் தொகையை அபேக்ஷா நிரபேக்ஷமாகச் செலுத்தி வருவது நலமென்று விஜ்ஞாபித்துநிற்கிறோம்.

# அஷ்ட க்ரஹ யோகத்தைப்பற்றி

ஐந்தாறு மாதங்களாகவே இதைப்பற்றின வார்த்தை எங்கும் பரவியிருந்தாலும் இரண்டொரு மாதகாலமாக மிகமிகப் பெருகி வருகின்றது. நமது நாட்டிற்கு எவ்விதமான சேதமும் நேர ப்ரஸக்தியில்லையென்று சோதிட நிபுணர்கள் பலர் தெரிவித்து வருகின்றார்கள். எனினும் ஜனங்களின் இதயத்தில் அச்சம் குடிபுகுந்தேயிருக்கின்றது. * ஓராயிரமாயுலகேழளிக்கும் பேராயிரங்கொண்டதோர் பீடுடையனான நாராயணன் 'பயக்ருத்' என்னுந் திருநாமத்திற்கு அடுத்தபடியாக 'பயநாசந:' என்னும் திருநாமத்தையும் கொண்டிருக்கின்றான். "பயம் பயாநாம் அபஹாரிணி ஸ்திதே மநஸ்யநந்தே மம குத்ர திஷ்டதி?" என்றான் ப்ரஹ்லாதாழ்வான். அஞ்சினார்க்குப் புகலிடமான அப்பெருமான் திருவடிகளையே தஞ்சமாகக் கொண்டிருப்போமுக்கு அஞ்சவேண்டியிருந்ததோ? "ஆள்கின்றானாழியான் ஆரால் குறையுடையம்" என்று மார்பிலே கைவைத்துறங்குவார்க்கு அபாய லேசமுமில்லையென்பது திண்ணம். "திருமாலுருவோடு அவன் சின்னமே பிதற்றா நிற்பதோர் திருமால் தலைக்கொண்ட நங்கட்கு எங்கேவரும் தீவினையே?" என்று துணிந்தருளிச் செய்கின்றார் நம்மாழ்வார். 'நஞ்சு தான் கண்டீர் நம்முடை. வினைக்கு நாராயணாவென்னும் நாமம்" என்கிறார் திருமழ்கையாழ்வார் :

"விபதஸ் ஸந்து நச் சச்வத் யாஸு ஸங்கீர்த்யதே ஹரி:" என்கிற குந்தீதேவியின் வார்த்தையை ஆராயுமிடத்து விபத்தை சங்கிக்கும் போதெல்லாம் ஹரிநாமஸங்கீர்த்தனம் நிகழவேணுமென்கிற தத்துவம் தெரிய வருகின்றது. அது தான் ஸகல விபத்துக்களுக்கும் அருமருந்தானது. (நாராயணாவென்னும் நாமத்தை) "துஞ்சும் போதழைமின் துயர்வரில் நினைமின்" என்ற ஆழ்வார்தாமே "துயரிலீர் சொல்லிலும் நன்றாம்" என்று நியமித்தருளினார். ஆனாலும் சொல்லுவாரில்லை. ஏதாவது விபத்தின் பிரஸங்கம் விளைந்தால் அப்போதாவது நாமஸங்கீர்த்தனம் செய்வார்களன்றோவென்று கருதிய கமலநாதன் அஷ்டக்ரஹயோகமென்கிற ஒரு விபத்தின் பிரஸ்தாவத்தை விளைவித்தான் போலும்.

ஆங்காங்கு அவரவர்கள் லோகக்ஷோபநிவிருத்திக்காகவும் லோகக்ஷேம அபிவிருத்திக்காகவும் பல்வேறு பாராயணங்களை பக்தி ச்ரத்தையுடன் நிகழ்த்தி வருகிறார்களென்று கண்டும் கேட்டும் மகிழ்ந்து வருகிறோம். ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீமத் திருக்குறுங்குடி ஜீயர்ஸ்வாமிகள் லோக க்ஷேமத்தை யுத்தேசித்து ரிலிஜியஸ் எண்டோமெண்டு போர்டு அதிகாரிகளுக்கு ஒரு ஸ்ரீ முகம் அநுக்ரஹித் தருளினதாகவும், அதில், ஆங்காங்கு தேவஸ்தானங்களில் ஸ்ரீஸுதர்சநசதகம், ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம், திருவாய் மொழியில் (7-4.) * ஆழியெழ * பதிகம் இவற்றைப் பாராயணம் செய்விக்கக் கட்டளையிட வேணுமென்று நியமித்திருப்பதாகவும், அப்படியே பலதலங்களில் நடைபெற்று வருவதாகவும் கேள்விப்பட்டு உள்ளங் குளிர்கின்றோம். திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்த ஸாரதிஸன்னிதி முதலான விடங்களில் நேரிலுமநுபவித்தோம். கச்சித் தேவப்பெருமாள் ஸன்னிதியிலும் ஸ்ரீஸுதர்சனாழ்வான், நம்மாழ்வார், மணவாள மாமுனிகள் ஸன்னிதிகளில் விசேஷ பாராயணங்கள் நடைபெற்றுவருகின்றன.

அருளிச் செயல் நாலாயிரத்தினுள்ளும் பிராட்டியைப்பற்றி வருமிடங்களை யெல்லாம் திரட்டினேம்; 132 இடங்கள் கிடைத்தன. அவற்றை அகராதி வரிசையில் தொடுத்து இதன் கீழ் வெளியிடுகிறோம். இந்த நூற்றுமுப்பத்திரண்டு பிராட்டி திரு நாமங்களை தினப்படி பலகால் சிந்திப்பார்க்கு இங்குமங்கு மெங்கு மின்பமாகுமே.

## திவ்யப் பிரபந்தத் திருமகள் வாழ்த்து மாலை

1. அந்தாமரைப்பேதை வாழி
2. அம்புருவ வரிநெடுங்கணலர்மகள் [வாழி
3. அரவிந்தப்பாவை வாழி
4. அலர்மகள் வாழி
5. அலர்மேல் மங்கை வாழி
6. அலர்வாய் மழைக்கண்மடந்தைவாழி
7. அல்லிமலர்த்திருமங்கை வாழி
8. அல்லிமலர்மகள் வாழி
9. அல்லிமாதர் வாழி
10. அல்லிமாமலர்மங்கை வாழி
11. அல்லியம்பூமலர்க்கோதை வாழி
12. அணிமாமலர்மங்கை வாழி
13. இன்துணைப்பதுமத்து அலர்மகள் [வாழி
14. எழில்மலர்மாதா வாழி
15. ஒண்தாமரையாள் வாழி
16. ஒண்டொடியாள் திருமகள் வாழி
17. ஒருமதிமுகத்துமங்கை வாழி
18. கடிமாமலர்ப்பாவை வாழி
19. கறைதங்குவேல்தடங்கண் திருவாழி
20. குலமாமகள் வாழி
21. கூந்தல்மலர்மங்கை வாழி
22. கொங்கார் இலைப்புண்டரீகத்தவள் [வாழி
23. கொம்பராவு நுண்ணேரிடை வாழி
24. கோதை நறுமலர்மங்கை வாழி
25. கோலமலர்ப்பாவை வாழி
26. கோலத்திருமாமகள் வாழி
27. சங்குதங்குமுன்கைநங்கை வாழி
28. சந்தணிமென்முலைமலராள் வாழி
29. சிரீ வாழி
30. சீதை வாழி
31. சுரும்புறுகோதை வாழி
32. செங்கமலத்திருமகள் வாழி
33. செய்யநெடுமலராள் வாழி
34. செய்யபோதில்மாது வாழி
35. செய்யவள் வாழி
36. தாமரைமலர்மேல்மங்கை வாழி
37. தாமரைமேல் மின்னிடையாள் வாழி
38. தாமரையாள் வாழி
39. திரு வாழி
40. திருமகள் வாழி
41. திருமங்கை வாழி
42. திருமாமகள் வாழி
43. திருமாது வாழி
44. திருமார்வத்துமாலைநங்கை வாழி
45. திருவுடையாள் வாழி
46. தூமலராள் வாழி
47. தாவியம்பேடையன்னாள் வாழி
48. தெய்வத்திருமாமலர்மங்கை வாழி
49. தேனார்மலர்மேல்திருமங்கை வாழி
50. தேனுலாவுமென்மலர்மங்கை வாழி
51. தேரணிந்த அயோத்தியர்கோன் [பெருந்தேவி வாழி
52. தோடுலாமலர் மங்கை வாழி
53. நல்விரை மலர் கோதிய மதுகரம் [குலவிய மலர்மகள் வாழி
54. நாண் மலராள் வாழி
55. நித்திலத் தொத்து வாழி
56. நெடுங்கடலமுது வாழி
57. நெறிந்த கருங்குழல் மடவாள் வாழி
58. நேரிழை மாது வாழி
59. பங்கயத்தாள் வாழி
60. பங்கயமாமலர்ப்பாவை போற்றி
61. பண்ணை வென்ற இன்சொல் மங்கை [போற்றி
62. பதுமத்து அலர்மகள் போற்றி
63. பனிமலராள் போற்றி
64. பனி மலர்மேல் பாவை போற்றி
65. பாவை போற்றி
66. பால் மொழியாள் போற்றி

67. பிறையுடைய வாணுதற்பின்னை [போற்றி
68. புண்டரீகத்தவள் போற்றி
69. புண்டரீக பாவை போற்றி
70. புலமனுமலர்மிசைமலர்மகள்போற்றி
71. பூங்கோதையாள் போற்றி
72. பூமகள் போற்றி
73. பூமங்கை போற்றி
74. பூம்பாவை போற்றி
75. பூமேய செம்மாது போற்றி
76. பூமேல் மாது போற்றி
77. பூவளருந்திருமகள் போற்றி
78. பூவார் திருமாமகள் போற்றி
79. பூவின் மிசை நங்கை போற்றி
80. பூவின் மேல் மாது போற்றி
81. பூவினை மேவிய தேவி போற்றி
82. பெரும்பணைத்தோள்மொய்ம்மலராள் [போற்றி
83. பேதை மங்கை போற்றி
84. பொற்றாமரையாள் போற்றி
85. பொலிந்திருண்டகார்வானில்மின்னே போல்தோன்றி மலிந்ததிருபோற்றி
86. போதார் தாமரையாள் போற்றி
87. போதில்மங்கை போற்றி
88. பௌவத்தாரமுதனையபாவை [போற்றி
89. மங்கை வாழி
90. மடப்பாவை வாழி
91. மடமகள் வாழி
92. மடவரல் வாழி
93. மதுகரம்குலவியமலர்மகள் வாழி
94. மதுமலராள் வாழி
95. மலர்க்கிழத்தி வாழி
96. மலர்க்குழலாள் வாழி
97. மலர்மகள் வாழி
98. மலர்மங்கை வாழி
99. மலர்மாது வாழி
100. மலர்மேல்மங்கை வாழி
101. மலர்மேல்மலிமடமங்கை வாழி
102. மலர்மேலுறைவாள் வாழி
103. மலர்வைகுகொடி வாழி
104. மலராள் வாழி
105. மன்னுமலர்மங்கை வாழி
106. மாது வாழி
107. மாமலர்மங்கை வாழி
108. மாழைமென்னோக்கி வாழி
109. மானமருமென்னோக்கி வாழி
110. மானேய்நோக்கின்மடவாள் வாழி
111. மின்னேத்தநுண்மருங்குல் [மெல்லியல் வாழி
112. மின்னொத்த நுண்ணிடையாள் [வாழி
113. மிதிலைச்செல்வி வாழி
114. மைதிலி வாழி
115. மைத்தகுமாமலர்க்குழலாள் வாழி
116. மையகண்ணாள் வாழி
117. மையார்கருங்கண்ணி வாழி
118. வலமார்பினில்வாழ்கின்ற மங்கை [வாழி
119. வடிவிணையில்லாமலர்மகள் வாழி
120. வடித்தடங்கண்மலரவள் வாழி
121. வண்டார்பூமாமலர்மங்கை வாழி
122. வரையாகத்துள்ளிருப்பாள் வாழி
123. வல்லிநாண்மலர்க்கிழத்தி வாழி
124. வாசஞ்செய்பூங்குழலாள் வாழி
125. வாள்நெடுங்கண்ணி வாழி
126. வாரணிந்த முலைமடவாள் வாழி
127. வில்லேர்நுதல்வேல்நெடுங்கண்ணி [வாழி
128. வில்லைத்துலைத்தபுருவத்தாள் வாழி
129. வெறியார்ந்தமலர்மகள் வாழி
130. வேங்கடம்சேர் தூவியம்பேடை [யன்னாள் வாழி
131. வேரிமாறாதபூமேலிருப்பாள் வாழி
132. வைதேவி வாழி.

# கீர்த்தி மூர்த்தியான கோவர்த்தனம் ஸ்வாமி.

ஸ்ரீமதுபயவே, கோவர்த்தனம் ரங்காசார்ய ஸ்வாமி யென்கிற திருநாமத்தைக் கேள்விப் படாதவர்கள் இவ்வுலகில் இருக்க மாட்டார்கள். அந்த ஸ்வாமியை இங்கே ஸேவிக்கப் பெறுகின்றீர்கள். காஞ்சீபுரிக்கும் ஸ்ரீபெரும்பூதூருக்கும் இடையிலுள்ள தென்னேரியகர மென்னும் அக்ரஹாரத்தில் அவதரித்து வித்யா ப்ரவீணராகி விசேஷமாக சாஸ்த்ரங்கள் கற்க வேணுமென்று குதூஹலங் கொண்டு வடநாட்டுக்கு எழுந்தருளி, காசி முதலான விடங்களில் நியாய வியாகரணமீமாம்ஸைகளை வாசித்து ப்ரசண்ட பண்டிதராய் ஸ்வதேசம் திரும்பும்போது ப்ருந்தாவன க்ஷேத்திரத்திற்கு எழுந்தருளினார். அவ்விடத்தில் இப்போது காணப்படுகிற ரங்கஜீமந்திரம் என்கிற மஹத்தான தேவஸ்தானம் அப்போது கிடையாது. உத்தராதிகளின் சில சிறு மந்திரங்கள் ஸாமான்யமாக இருந்ததுண்டு. அவ்விடத்தில் அப்போது ராதாக்ருஷ்ண ஸேட் என்கிற கோடீச்வர ப்ரபு பூலோக குபேரனென்று விளங்கிக்கொண்டிருந்தார். இந்த ரங்காசார்ய ஸ்வாமி அப்போது அங்கு ஒரு தேசாந்தரிபோல் ப்ரஹ்மசாரியாய் வந்தார். இவருடைய விலக்ஷண தேஜஸ்ஸில் ஈடுபட்ட அந்த ராதாகிருஷ்ண ஸேட் ஆறு கோடி ரூபாயை இவருடைய திருவடி வாரத்திலே ஸமர்ப்பித்து இவரிடத்தில் சக்ராங்கனம் பெற்று ப்ரதம சிஷ்யனானான். பிறகு பலபலர் க்ரமேண ஆச்ரயித்தார்கள். உடனே இவர் ப்ருந்தாவனத்தில் தென்னாட்டுத் திவ்யதேசம் போன்ற பெரிய ஸன்னிதியை ப்ரதிஷ்டாபனம் செய்யத் தொடங்கி, தென்னாட்டிலிருந்தே ஆயிரக்கணக்கான சிற்பிகளை வரவழைத்து விச்வ கர்மஸ்ருஷ்டி யென்னலாம்படியான மஹத்தான ஸன்னிதியையும் அதிவிலக்ஷண ப்ராகார கோபுர மண்டப புஷ்கரிண்யாதிகளையும் அக்ரஹாரத்தையும் ப்ரதிஷ்டிப்பித் தருளினார்.



கீர்த்தி மூர்த்தியான கோவர்த்தனம் ஸ்வாமி

ப்ருந்தாவனத்திற்கு 10, 15 மைல் தூரத்திலுள்ள கோவர்த்தனத்திலும் இந்த ஸ்வாமிக்குப் பீடமுண்டு. அதையிட்டே கோவர்த்தனம் ரங்காசார்ய ஸ்வாமி யென்று இந்த ஸ்வாமிக்கு விச்வப்ரஸித்தமான வ்யபதேசம். அக்காலத்தில் இந்த ஸ்வாமியினால் அந்த ப்ராந்தத்தில் ஞானச் செல்வம் பெறுவிக்கப் பட்டவர்கள் பலபலர். இவர் அருளிச் செய்திருக்கும் க்ரந்தங்களும் பலபல. இவருடைய கீர்த்திக்கு விஜய ஸ்தம்பமாக விளங்குவது ப்ருந்தாவன ஸன்னிதி.

# சின்ன காஞ்சீபுரம் க்ரந்தமாலா ஆபீஸ்
# ஸ்ரீமத் P. B. அண்ணங்கராசாரியார் ஸ்வாமிகளின்
# பதிப்பு நூல்களுக்குச் சுருக்கமான விளம்பரம்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்தம் முழுமைக்கும் விரிவான திவ்யார்த்த தீபிகையுரை தனித்தனியாக வாங்கினால் 66 ரூ. ஒரேதடவையில் வாங்கினால் 50 ரூ.
2. உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்திப்பிரபந்தம், ஞானஸாரம், பிரமேயஸாரம், ஸப்தகாதை இவற்றின் உரையும் சேர்ந்து நித்தியாநுஸந்தானம் முழுமைக்கும் விளக்கவுரை. ரூ. 3-50.
3. முகுந்தமாலை தொடங்கி, ஆளவந்தார் எம்பெருமானார் கூரத்தாழ்வான் பட்டர் கூரநாராயணஜீயர் மணவாள மாமுனிகள் தச்சிஷ்யர்கள் வரையில் ஸாதித்த பெரிய சிறிய ஸகலஸ்தோத்ரங்களுக்கும் உரை தனித்தனியாக வாங்கினால் 25 ரூ. ஏககாலத்திலானால் 20.
4. ஹயக்ரீவஸ்தோத்ரம், கோதாஸ்துதி, பரமார்த்தஸ்துதி, வைராக்ய பஞ்சகம் ந்யாஸதசகம், பகவத்தியான ஸோபானம், தசாவதாரஸ்தோத்ரம் யதோக்த காரி, அஷ்டபுஜ, காமாஸிகாஸ்தோத்ரங்கள் ஆகிய தேசிக ஸ்தோத்ரங் களுக்கு விரிவுரை 4 ரூ. தேசிகரஹஸ்யமாலை (1 to 16) ரூ. 1.
5. ஆழ்வார்கள் வைபவம், ஸகலபூர்வாசார்ய ப்ரபாவம், அத்திகிரிவைபவம், ஆழ் வார்கள் அநுபவித்த பகவத்கதைகள், நரஸிம்ஹாவதாரசரிதம், அபூர்வ ராமாயணம், ஸ்ரீஜயந்திமலர் இவையெல்லாம் சேர்ந்து. ரூ. 5.
6. வான்மீகிராமாயணவசனம். (உத்தரகாண்ட முட்பட எளியவசனநடை) ரூ. 8
7. நாலாயிர திவ்யப்பிரபந்தம் மூலம்மட்டும். பலவகை யநுபந்தங்களுடன். ரூ. 8.
8. பகவத்ராமாநுஜக்ரந்தமாலை உடையவர் அருளிச் செய்த ஸகலக்ரந்தங்களும் ஒரே ஸம்புடம் சிறந்த பயிண்டு. தேவநாகரலிபி. ரூ. 15.
9. பகவத்விஷயம் ஈடுமுப்பத்தாறாயிரப்படி (பூர்த்தியாக இரண்டு ஸம்புடம். நித்யகாலக்ஷேபத்திற்கு உரியது.) ரூ. 25. 10. ஷை தெலுங்குலிபி. ரூ. 25.
11. ஸ்ரீவரவரமுநீந்த்ரக்ரந்தமாலை. (மணவாள மாமுனிகளருளிச் செய்த நான்கு ரஹஸ்யங்களின் வியாக்கியானங்கள் ஒரேஸம்புடம்; தெலுங்குலிபி. ரூ. 8-00
12. ஸகலபூர்வா சார்யஸ்தோத்ரமாலை (தேவநாகரலிபி.) ரூ. 3.
13. ஷை தெலுங்குலிபி. ரூ. 2-00
14. வேதாந்ததேசிக ஸகலஸ்தோத்ராவளீ (தேவநாகரலிபி.) ரூ. 3.
15. ஷை தெலுங்குலிபி. 3-25
16. யாதவாப்யுதயம், ஹம்ஸஸந்தேசம், ஸுபாஷிதநீவி, ஸங்கல்பஸூர்யோதயம். (இவை நான்கும் ஒருஸம்புடம்—தேவநாகரலிபி.) ரூ. 6.
17. தத்வடீகை, நிக்ஷேபரக்ஷை, ஸச்சரித்ரரக்ஷை, ஸ்ரீபாஞ்சராத்ரரக்ஷை. ரூ. 6.
18. தானேயெழுதிய தன்சரிதை. (P. B. A. ஜீவிய சரிதம்.) ரூ. 2.
19. த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம் (எம்பெருமானார் ஸ்ரீஸூக்திகள் பெரும்பாலும் திவ்யப்ரபந்தங்களை யடியொற்றியவையென்று விரிவாக நிரூபிப்பது. ரூ. 2.
20. ஸத்ஸம்ப்ரதாயஸுதாநிதி. (ஸம்ஸ்க்ருதநூல், தேவநாகரலிபி. தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸகலார்த்த விசேஷங்களுங்கொண்டது. ரூ. 2.
21. கம்பரின்பக்கவித் திரட்டு. கம்ப ராமாயணம் 1, 2 காண்டங்களிலிருந்து தொகுக் கப்பட்ட மிகச் சிறந்த பல பாடல்கள் பதவுரை பொழிப்புரையுடன். ரூ. 2.
22. பிள்ளைப் பெருமாளையங்காருடைய அஷ்டப் பிரபந்தத்திற் சேர்ந்த நூற் றெட்டுத் திருப்பதியந்தாதி—விளக்கவுரையுடன் விலை ரூ. 1.
23. ஷை திருவேங்கடமாலை—விளக்க வுரையுடன் விலை ரூ. 1-50.
24. பலவகை விமர்சநூல்களும் விவாதநூல்களுமான சிறுநூல்கள் நூறு. ரூ. 10.

## P. B. A. பதிப்புநூல் தொகுதி நெ. 1

### இதில் சேர்த்து ஒரே ஸம்புடமாக பயிண்டுசெய்யப் பட்டவை

1. பரந்தரஹஸ்யம், மாணிக்கமாலை
2. ஆச்சான்பிள்ளை யாறுரஹஸ்யம்
3. ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயி
4. ஸ்ரீராமாயணஸௌரபம். (நாலாயிர வியாக்கியானங்களில் ஸ்ரீராமாயணசுலோகங்களுக்குப் பூருவாசாரியர்களருளிய விசேஷவுரை கொண்டது.)
5. ஐதிஹ்யநிர்வாஹ ரத்தினமாலை. (நாலாயிர வியாக்கியானங்களிலுள்ள ஐதிஹ்யங்களும் நிர்வாஹங்களும்.)
6. முமுக்ஷுப்படி ஸாரார்த்ததீபிகை.
7. ஸ்ரீவசநபூஷண தாத்பரியஸாரம்
8. ஆசார்ய ஹ்ருதயப்பதவுரை
9. தக்ஷிணோத்தரயாத்ராவிசேஷம். (தென்னாடும் வடநாடும் யாத்திரை செய்ய விரும்புமவர்களுக்கு மிகவும் ஸௌகரியமளிக்கும் நூல்.)
10. நைச்சியாநுஸந்தானம். (மூன்றுதத்துக்குப்பிழைத்த அருவினைநோயித்யாதி ஆசார்ய ஹ்ருதயஸூக்தி விவரணபரமானது.)
11. நப்பின்னை யவதார ரஹஸ்யம்
12. ஞானஸார ப்ரமேயஸார ஸப்தகாதை யுரைகள்
13. நரஸிம்ஹாவதாரஹேது நிர்ணயம், விபவாவதார சோகதத்வம்
14. முப்பத்திரண்டு மொழிமாலை. ஸாதுஸாத்விகஸம்வாதம். மாமுனிவன் மேற்கோள் விளக்கு. (இம்மூன்றும் ஸ்ரீவைஷ்ணவமஹாநிதி.)
15. அங்கண்மா ஞாலத்தமுது. ஆக 15 கொண்ட ஒரு ஸம்புடத்தின் விலை ரூ. 12.

(இவை தனித்தனியாகவும் கிடைக்கும்.)

## P. B. A. பதிப்புநூல் தொகுதி நெ. 2

1. பூர்வாசார்ய வைபவம். (ஸ்ரீமந்நாத முனிகள் தொடங்கி வேதாந்த தேசிகன் மணவாளமாமுனிகள் வரையிலுள்ள ஸகலாசாரியர்களுடையவும் வைபவம்.
2. வரதன்ஸன்னிதி வரலாறு. (தேவப்பெருமாள் ஸன்னிதியைப்பற்றி நவீனர் எழுதிய தப்பான விஷயங்களை ப்ரமாணபுரஸ்ஸரமாகக் கண்டித்தெழுதிய 16 அத்யாயங்கள் கொண்டது.)
3. ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி. (தென்னாசார்ய ஸம்பிரதாயத்தின் ஸகலார்த்தங்களையும் திருமண் காப்பு ஆகாரங்களையும் விரிவாக விளக்குவது.)
4. ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரன். (பிரதிபக்ஷிகளின் பல துர்வாதங்களை 116 பாராக்களால் கண்டித்தது.
5. பன்னிரு திங்களநுபவம். (பன்னிரண்டு மாதங்களிலும் அவதரித்த ஆழ்வாராசாரியர்களைப் பற்றின விசேஷார்த்த சிந்தனைகள்.)
6. அறுபத்திரண்டு உபந்யாஸமாலை
7. எம்பெருமானா ரறுபத்திரண்டு, சாரீரக மீமாம்ஸையறுபத்திரண்டு, பகவத்கீதையறுபத்திரண்டு.
8. அறுபத்துமூன்று உபந்யாஸமாலை
9. சக்ரவர்த்தி திருமகனறுபத்துநான்கு, அறுபத்துநான்கு நன்மொழிகள், அறுபத்துநான்கு நல்வார்த்தைகள்
10. நான்கண்ட நல்லது, திவ்யார்த்த தீபிகைச் சிறப்பு ஆக 10 கொண்ட ஸம்புடம் 10 ரூ.

(இவை தனித்தனியாகவும் கிடைக்கும்.)

## P. B. A. பதிப்பு-ஸங்கீர்ணஸம்புடம் நெ. 3

1. முகுந்தமாலை உரை
2. ஸ்தோத்ரரத்னவுரை
3. ஐப்பசித்திருமூலமலர்
4. ராமாநுஜதயாபாத்ர சரித்திரம்
5. ஷை ஸம்ஸ்க்ருத பாஷை நாகரலிபி
6. ஜகதாசாரியஸூக்திஸுதா நிதி
7. விஜயகோபாலஸம்பாஷணை
8. வேதாந்தவாரியரும், அண்ணங்கராரியரும்
9. பத பாட பரித்ராணம். (வேதவிசார பரமான வடமொழி நூல்.)

ஆக இவ்வொன்பதுங்கொண்ட ஒரு ஸம்புடத்தின் விலை ரூ. 6-75.

வைதிக லௌகிக மஹநீயமண்டலி 100 பெரியார்கள் கொண்டது 1· ரூ.

## உபயவேதாந்த மணித்திரள்கள்.

— முன் தொடர்ச்சி —

# 7. வடமொழி வேதாந்தமணி.

ஜீவாத்மாக்களுக்கு பந்த தஶையென்றும் முக்தி தஶையென்றும் இரண்டு தஶைகளுண்டென்பது யாவருமறிந்ததே. கருமபாசங்களினல் கட்டுண்டு இங்கே கிடக்கும் நிலை பந்த தஶையாகும். ஒரு காலவிஶேஷத்திலே கட்டில் நின்றும் விடுபட்டுப் பேரின்பம் நுகரும் நிலை முக்தி தஶையாகும். பந்த தஶையிலே சேதநர்களான நாம் தனிப்பட்டிருந்து எம்பெருமானை யநுபவித்து வருகிறோமென்பது கட்கூடு. இங்ஙனமே ஜீவாத்மாக்கள் முக்தி தஶையிலும் தனியேயிருந்து கொண்டு பரப்ரஹ்மத்தை யநுபவிக்கிறார்களா? அல்லது ஜீவாத்மாக்களுக்கு பரப்ரஹ்மத்தோடு ஐக்யாபத்திதான் மோக்ஷமா? என்பது விமர்சிக்கப்பட வேண்டும். ப்ரஹ்மஸூத்ரகாரரான வியாஸ மஹர்ஷியின் நிர்ணயம் எப்படிப்பட்டது? என்பதை முக்கியமாகக் கண்டுணரவேணும். முண்டகோபநிஷத்தில் "ஸ ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி—ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி" என்றொரு வாக்கியமுள்ளது. அதனுடைய முன்பின் ஸந்தர்ப்பத்தைச் சிறிதும் விமர்ஶியாமல் ப்ரஹ்மத்தோடு ஐக்கியமடைவதுதான் மோக்ஷமென்று கூறுகின்ற அத்வைதிகளின் வாதம் யுக்தந்தானா? என்று பார்க்க வேண்டும்.

பார்க்குமளவில் ப்ரஹ்மஸூத்ரத்திலுள்ள *ஸம்பத்யாவிர்ப்பாவாதிகரணம் இந்த ஐக்ய வாதத்தைச் சிறிதும் ஸஹிக்கமாட்டாதென்பது புலப்படும். அதில் நாலாவது அத்யாயம் நாலாவது பாதம் முதல் ஸூத்ரம் * ஸம்பத்யாவிர்பாவ: ஸ்வேந ஶப்தாத்—ஸம்பத்யாவிர்ப்பாவ: ஸ்வேந ஶப்தாத் * என்பது. இதில், அர்ச்சிராதி மார்க்கத்தாலே பிரகிருதி மண்டலத்திற்கப்பால் அப்ராக்ருத தேஶவிஶேஷத்தில் ஆதித்யவர்ண திவ்யமங்கள விக்ரஹவிஶேஷ விசிஷ்டமாய் வாஸுதேவாக்க்யமான பரஞ்சோதியை அணுகினவனுக்கு கர்மக்ருத ஸ்வரூப திரோதானம் தொலைவதாகிற முக்தி சொல்லப்பட்டுள்ளது. இந்த ஸூத்ரத்தின் பொருளாவது, ஸம்பத்ய (ஸம்பத்ய)—பரஞ்சோதியை யணுகி, ஆவிர்ப்டாவ:—ஸம்ஸார தஶையில் மறைந்திருந்த அபஹதபாப்மத்வாதி குணஷ்டகம மறைவு நீங்கி வெளிப்படுவதுதான் மோக்ஷமென்பது. ஸ்வேந ஶப்தாத் (ஸ்வேநஶப்தாத்)—ச்ருதியில் "ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே—ஸ்வேநரூபேண அபிநிஷ்பத்யதே" என்று சொல்லியிருக்கையாலே — என்பதாம். "அஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே" என்கிற ச்ருதிவாக்கியத்தில் பரஞ்சோதியை யணுகினவுடனே விளைவதாகச் சொல்லப்பட்ட அபிநிஷ்பத்தியானது ஏற்கெனவேயிருந்த ஸ்வரூபத்தின் ஆவிர்பாவமொழிய அபூர்வமானதோர் ஆகாரத்தின் உத்பத்தியன்று என்றபடி. இங்ஙனே பொருளல்லாவிடில் ரூபேண என்பதற்கு ஸ்வேந என்று விஶேஷணமிட்டிருப்பது வியர்த்தமாகும். ஏற்கெனவேயுள்ள ஸ்வரூபந்தான் "ஸ்வேந ரூபேண" என்பதனால் தெரிவிக்கப்படுகிறது. ஏற்கெனவேயிருந்த ஸ்வரூபத்திற்கு இப்போது ஆவிர்பாவமாவது என்னவென்றால், மறைந்திருந்தவது மறைவு நீங்கி உள்ளபடி வெளிப்படுவதேயாம். ஜீவாத்மாவின் இயற்கையான ஸ்வரூபம் அபஹதபாப்மத்வாதிகளான எட்டு குணங்களை யுடைமையென்பது ஸூத்ரகாரரே நிர்ணயித்த விஷயமாகும். அப்படிப்பட்ட ஸ்வரூபம் ஸம்ஸாரதசையில் பிரகாஶம் பெறாமல் மறை

வுற்றிருந்தது. இவ்விஷயம் "பராபித்யாநாத்து திரோஹிதம் ததோ ஹ்யஸ்ய பந்தவிபர்யயௌ" என்னும் ஸூத்ரத்தில் தெரிவிக்கப்பட்டது. ஜீவாத்மாவின் அந்த ஸ்வரூபமானது, பராபித்யாநாத்—பரமபுருஷனுடைய ஸங்கல்பத்தாலே, திரோஹிதம்—மறைந்திருந்தது. அஸ்ய—இந்த ஜீவாத்மாவினுடைய, பந்தவிபர்யயௌ—ஸம்ஸார பந்தமும் மோக்ஷமும், தத:—பரமபுருஷஸங்கல்பத்தாலேயே ஆகின்றனவன்றோ = என்பது உதாஹரித்த ஸூத்ரத்தின் பொருள். அபஹதபாப்மத்வாதிகளான இயற்கையாகாரத்திற்குத் திரோதானமாவது, அதனுடைய கார்யகரத்வமில்லாமையேயாம். இதற்கு ஹேது ஏதென்னில் அநாதிகருமமடியான பகவந்நிக்ரஹ ஸங்கல்பமே. அந்த ஸங்கல்பம் நிவ்ருத்தமாபளவில் ஸத்ஸங்கல்பத்வாதி குணங்கள் கார்ய கரமாகையாலே திரோதாந நிவிருத்தியுண்டாகிறது. அதுதான் ஸ்வரூபாவிர்ப்பாவமெனப்படுகிறது.

இந்த நியாயம் ஞானம் முதலிய மற்ற குணங்களிலுமொக்கும். ஞானமுங்கூட ஸம்ஸாரதசையயில் கருமத்தினுல் ஸங்குசிதமாய் முக்திதசையில் ஸங்கோசஹேதுவான கருமம் தொலைந்ததனுல் இயற்கையான விகாஸாவஸ்தையையடைகிறது. ஞானத்திற்கு ஸங்கோசமாவது விஷயங்களைப் பரிமிதமாகக் கொள்ளுகை. விகாஸமாவது "ஸர்வம் ஹ பச்ய: பச்யதி—ஸர்வம் ஹ பச்ய: பச்யதி" என்கிற ச்ருதி ஸித்தமான—உள்ளது உள்ளபடி ஸர்வ வஸ்துக்களையும் ஸாக்ஷாத்கரித்தல். ஆக, பரஞ்சோதியை யணுகினவனுக்கு கர்மநிபந்தன ஸ்வரூப திரோதானத்தின் நிவ்ருத்தியாகிற முக்தி சொல்லப்பட்டதாயிற்று. திரோதானம் தொலையவே ஸர்வ வஸ்துக்களையும் உள்ளபடி ஸாக்ஷாத்கரிக்க வல்லவனுய்க்கொண்டு பரமபுருஷனை அனுபவிக்கிருனென்னுமிடம் கீழ்ச்சொன்ன ஸம்பத்யாவிர்பாவாதிகரணத்திற்கு அடுத்ததான அவிபாகாதிகரணத்தில் ஸித்தாந்தீகரிக்கப்பட்டுள்ளது. ... ... (*)

---

# 8. பகவத்விஷய ரஸாநுபவம்.

### (உண்ணிலாவிய வைவரால்) திருவாய்மொழி 7—1—1.

எம்பெருமான் கீதையிலே *தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா* என்று சொல்லிவைத்து, உடனே *மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே* என்றும் சொல்லிவைத்தான். அதாவது—ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவராலவிழ்க்கவொண்ணுதாப் போலே தான் பிணைத்த மாயப் பிறவிப் பிணையானது ஒருவராலும் கழற்றவொண்ணுதது என்று முன்னம் சொல்லிவைத்து, என் திருவடிகளையே தஞ்சமாகப் பற்றுவார் யாவரோ அவர்கள் அந்தப்பிணையை எளிதாகக் கழற்றிக்கொள்ள வல்லவர்கள் என்று பின்னைச் சொன்ஞன். அந்தத் திருமுகப் பாசுரத்தில் நம்பிக்கையாலே ஆழ்வார் கீழ்த் திருவாய்மொழியில் [*உலகமுண்ட பெருவாயா* என்கிற பதிகத்தில்] பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஆர்த்தராய்ச் சரணம் புகுந்தார் மாயப்பிறவி மயர்வறுத்து நித்யகைங்கர்ய ஸாம்ராஜ்யம் பெறவேணுமென்று.

அந்த சரணுகதி பலித்ததில்லை. பரதாழ்வானுடைய சரணுகதிக்கு முன்னே தேவதைகளின் சரணுகதி கிடந்ததாய் அதற்குப் பலன் அளித்த பின்னரே பரத சரணுகதிக்குப் பலன் தர வேண்டினுப்போலே—இங்கும் ஆழ்வாருடைய சரணுகதிக்கு முன்னே இவ்வுலகில் சில

ஸம்ஸாரிகள் சரணாகதி செய்திருப்பர்கள் போலும்; நாங்கள் வாழலாம்படி ஸர்வோத்துங்கமானதொரு பிரபந்தத்தை உபகரித்தருள வேணுமென்று சிலர் சரணாகதி செய்திருந்தார்களாகவேணும்; அதுதான் முந்தின சரணாகதியாகையாலே அதற்குப் பலனளித்த பின்னரே ஆழ்வாருடைய சரணாகதிக்குப் பலனளிக்க வேண்டி எம்பெருமான் தாழ்த்தான்.

ஆழ்வாருடைய சரணாகதிக்கு முன்னே இப்படியொரு சரணாகதி யிருந்திருக்க வேணுமென்னுமிடம் ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியாலும் தெரியாநின்றது. ஆழ்வார் தாமே மேலே "எண்ணுதனகளெண்ணும் நன் முனிவரின்பம் தலைச் சிறப்பப் பண்ணார் பாடலின்கவிகள் யானாய்த் தன்னைத்தான்பாடி" என்றருளிச் செய்யாநின்றார்; திருவாய்மொழி யருளிச் செய்கைக்கு நிதானம் கூறுகிற பாசுரமாயிற்றிது. "எண்ணுதனகளெண்ணும் நன்முனிவரின்பம் தலைச் சிறப்ப" என்றவிடத்து ஆழ்வார் திருவுள்ளத்தில் ஓடிக்கிடந்த பொருளாவது—

திருவாய்மொழி அவதரிப்பதற்கு முன்னே முனிவர்களெல்லாரும் திரள்கூடி 'எம்பெருமானுடைய பெருமைகளையெல்லாம் வருணிக்கப் பிறந்த உபநிஷத்துக்களுங்கூட *யதோ வாசோ நிவர்த்தந்தே* என்று பின்வாங்கிப்போயின; அப்படியன்றிக்கே பகவத்ஸ்வரூப ரூப குணவிபூதி சேஷ்டிதங்களையெல்லாம் செவ்வனே பேசவல்லதொரு பிரபந்தம் அவதரிக்க வேணுமென்று பெருமானைப் பிரார்த்திப்போம்' என்று நினைத்தார்களாம். பிறகு திருவாய்மொழி அவதரித்தான பின்பு அம்முனிவர்கள் மறுபடியும் திரள்கூடி 'எம்பெருமானுக்கு இன்னம் சில குணங்களும் இன்னம் சில விபூதிகளும் உண்டாக வேணும்' என்று நினைத்தார்களாம். இப்படியே நம்பிள்ளை அர்த்தமருளிச் செய்கிறார். *எண்ணுதனகளெண்ணும் நன்முனிவர்* என்கிற மூலத்திற்கு இங்ஙனே பொருள்சொல்லியே தீரவேண்டும். திருவாய்மொழியினால் எம்பெருமானுடைய குணவிபூதிகளெல்லாம் கபளீகரிக்கப்பட்டுவிட்டன என்பது பரம தாற்பரியம்.

இப்பாசுரத்தின்படி எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குணவிபூதி சேஷ்டிதங்களைக் குறையறப் பேச வல்லதொரு பிரபந்தம் திருவவதரிக்கவேணுமென்று ஏற்கெனவே சிலர் சரணாகதி செய்திருக்க வேண்டுகையாலே முந்துற முன்னம் அதற்குப் பலனளிக்கவேண்டி எம்பெருமான் ஆழ்வாருடைய சரணாகதியைப் பழுதாக்கினானென்னலாம். இவருடைய சரணாகதிக்கு இப்போதே பலன்தந்தால் திருவாய்மொழி அரைகுறையாயன்றோ போயிருக்கும். முந்தின சரணாகதிக்குப் பலன் முற்றிற்றாகாதே. திருவாய்மொழி தலைக்கட்டவேண்டி ஆழ்வாரை இன்னமும் இவ்விபூதியிலே வைத்தானாயிற்று. முன்னமே இவர் "பாவியேனைப் பல நீ காட்டிப்படுப்பாயோ" என்று வயிறெரிந்திருக்கிறாரே; அந்த வயிற்றெரிச்சல்தானே மேலும் தலையெடுத்து *அந்தோ வடியேனுன பாத மலரில்லே னிறையுமே யென்று சொன்னவடியேனை, அகற்றுமவற்றின் நடுவேயிருத்தித் துடிக்கவைப்பது தருமமோவென்று கூப்பிடுகிறார்* உண்ணிலாவியவென்னும் இத் திருவாய்மொழியில்.

ஜிதேந்திரியரில் தலைவரான ஆழ்வார் இந் நிலத்திலிருப்புக்குத் துடிக்கவேண்டிய அவசியமுண்டோ? விஷயங்களும் இந்திரியங்களும் இருந்தாலென்ன? அவற்றில் ஆழ்வார் கலங்குகைக்கு ப்ரஸக்தியில்லையே, துடிப்பானேன்? என்னில்; இதற்கு ஆழ்வார் தாமே இதில் ஆறாம் பாட்டில் ஸுஸ்பஷ்டமாக உத்தரமருளிச்செய்கிறார் "விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை, மண்ணுளென்னைப் பெற்றால் என்செய்யா மற்று நீயும் விட்டால்" என்று.

* மாறன்பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங் கூறவவதரித்த மங்கையர்கோன் தம்முடைய பெரிய திருமொழியிலே இத்திருவாய்மொழியை விவரியா நிற்பாராய் இரண்டு திருமொழிகள் அருளிச் செய்கிறார்; 1. திருவுக்குந் திருவாகிய செல்வா. 2. மாற்றமுள.]

இங்கே ஈட்டு ஸ்ரீ ஸூக்திகள் காண்மின்—“*முடியானேயிற் கரணங்களையுடைய இவர்க்கு இந்த்ரியவச்யதை யுண்டென்னுமிடம் கீழோடு விருத்தமன்றோ வென்னில்; அசல் அகம் நெருப்புப்பட்டு வேவாநின்றால் தந்தாம் அகம் பரிஹரியாதிருப்பாரில்லையிறே; புற்றினருகே பழுதை கிடந்தாலும் ஸர்ப்பம் என்று புத்திபண்ணி ப்ரமிக்கக் கடவதாயிருக்குமிறே. அங்குத்தைக்கும் இங்குத்தைக்கும் பொதுவான வுடம்போடே யிருக்கிறபடியைக் கண்டார்; நாட்டாரடைய இந்த்ரிய வச்யராய்க் கிடந்து நோவுபடுகிறபடியையும் கண்டார்; இது நம்மளவும் வரில் செய்வதென்? என்று அஞ்சிக் கூப்பிடுகிறார்.” என்பதாம்.

இந்த ப்ராக்ருத மண்டலத்திலே யிருந்தால் என்ன அனர்த்தம் விளையுமோ என்கிற அச்சம் மேலிட்டு ஓலமிடுகிறார் என்றதாயிற்று. ... ... இனி பாசுரம்) ....

உண்ணிலாவிய வைவரால்குமைதீற்றி என்னையுன்பாதபங்கயம் *
நண்ணிலாவகையே நலிவானின்னமெண்ணுகின்றாய் *
எண்ணிலாப்பெருமாயனேயிமையோர்களேத்தும் உலகம்மூன்றுடை *
அண்ணலே யமுதே யப்பனே என்னையாள்வானே! (க)

அளவிடமுடியாத ப்ரக்ருதி தத்வத்தை உபகரணமாக வுடையவனே! தேவர்களாலே துதிக்கப் படுபவனும் மூவுலகங்களையும் சேஷமாக வுடையவனுமான ஸ்வாமியே! பரம போக்யனே! மஹோபகாரங்கள் செய்பவனே! என்னை நிர்வஹித்துக்கொண்டு போருமவனே!, அடியேனை உள்ளே நிரந்தர வாஸம் பண்ணுகின்ற பஞ்சேந்திரியங்களாலும் நலிவுறும்படி பண்ணி உனது திருவடித் தாமரைகளைக் கிட்டாதபடியாகவே இன்னமும் ஹிம்ஸிப்பதாக எண்ணியிருக்கிறாய் போலும்—என்பது பாசுரத்தின் பொருள்.

* * * பிரானே! உன் திருவடிகளையே சரணமாகப்பற்றின வென்னை இந்திரியங்களை யிட்டு நலியப் பார்க்கிறாயே! இது தகுதியோ? என்கிறார். பகைவர் பாஹ்ய சத்ருக்களென்றும் ஆந்தரசத்ருக்களென்றும் இருவகைப்படுவர்; ஆயுதங்களாலே நமது உடலுக்கு நலிவை விளைக்கும் பகைவர் பாஹ்ய சத்ருக்களாவர். அப்படியன்றிக்கே கண்ணுக்குத் தெரியாதபடி உள்ளேயிருந்துகொண்டே நலிகின்ற பஞ்சேந்திரியங்கள் ஆந்தர சத்துருக்களெனப்படும்; இத்தன்மையை ‘உண்ணிலாவிய வைவரால்’ என்று ஆழ்வார் தெரிவிக்கின்றார். அசேதநங்களான இந்த்ரியங்களை ‘ஐந்தால்’ என்று சொல்லவேண்டுமிடத்து ‘ஐவரால், என்றது—இந்த்ரியங்களானவை அசேதனங்களைப் போலன்றிக்கே சேதநர்கள் போலவே நின்று நலியுந் தன்மையைப் பற்ற. திருமங்கையாழ்வாரும் “உடனின்று ஐவரென்னுள் புகுந்து” என்றருளிச் செய்தது காண்க.

குமைதீற்றி—குமைக்கும்படி பண்ணி; குமைத்தலாவது ஸஹிக்க வொண்ணாதபடி ஹிம்ஸித்தல். இந்திரியங்கள் ஹிம்ஸித்தால் அதற்காக எப்பெருமானை நொந்து பேசலாமோ வென்னில்; எம்பெருமானுக்கு ஹ்ருஷீகேசனென்று ஒரு திருநாமமுண்டு; ஹ்ருஷீகமென்று இந்திரியங்களுக்குப் பெயர்; அவை தானிட்ட வழக்காம்படியிருப்பவன் என்பது பற்றியே ஹ்ருஷீகேசனென்று திருநாமமாயிற்றென்பதை ஆழ்வார் தாம் அறிந்தவராதலால் இங்ஙனே

சொல்லுகிறார்போலும். பிரானே! உனக்கு விதேயமல்லவோ அவை; நீ நியமித்தால் கேளாவோ அவை; நீயேயன்றோ அவற்றை ஏவி நலிகின்றாய் என்கிறாய்.

தமக்கு நலிவாவது இன்னதென்பதைக் காட்டுகிறார் "உன் பாத பங்கயம் நண்ணிலா வகையே" என்று. திருவடிகளைக் கிட்டாதொழிகையே இவ்வாத்மாவுக்கு நலிவு என்றிருக்கிறார். நலிவான் இன்ன மெண்ணுகின்றாய்—*அகலகில்லே னிறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா! உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேன் * என்றபின்பும் என்னை இங்ஙனம் நலியப் பார்க்கிறாயே, இது தருமமோ? என்கிறார்.

ஆழ்வார் இங்ஙனே யருளிச் செய்வதைப்பற்றி ஸ்ரீவசநபூஷணத்தில் சில ஆராய்ச்சிகள் தோன்றியுள்ளன; அதில் மூன்றும் பிரகாணத்தில் "ஸ்வதோஷாநுஸந்தாநம் பயஹேது; பகவத்குணாநுஸந்தாநம் அபயஹேது; பயாபயங்களிரண்டும் மாறாடில் அஜ்ஞதையே ஸித்திக்கும்" என்று முந்துற அருளிச்செய்தார். சேதநன் தன்னுடைய தோஷங்களைப் பார்த்தவாறே பயப்படவும், எம்பெருமானுடைய திருக்குணங்களை அநுஸந்தித்தவாறே அந்த பயம் தீரவும் நேரும்; இப்படியன்றிக்கே 'அநாதிகாலம் தனக்குப் பரதந்த்ரமான ஆத்ம வஸ்துவை கர்ம வ்யாஜத்தாலே ஸம்ஸரிக்கச் செய்து போந்தவனன்றோ, கேட்பாரற்ற ஸ்வதந்த்ரனானவன் இன்னமும் ஸம்ஸரிப்பிக்கில் செய்வதென்?' என்று அவன்படியை நினைத்து பயப்படுகையும், 'முன்போலன்றிக்கே நமக்கிப்போது ஆத்ம குணங்களுண்டாகையால் பேற்றில் கண்ணழிவு இல்லை' என்று தன் படியை நினைத்து பயம் கெடுகையும் ஆகுமாகில் அவிவேகமே ஸித்தித்து விடும்; தான் தனக்கு நாசகனென்று பயப்படுகையும் ஈச்வரனே ரக்ஷகனென்று பயம் கெடுகையுமாகிற விவேக லேசம் இல்லாமையாலே அவிவேகமே ஸித்தித்துவிடும்—என்பதாக அருளிச் செய்தார்; இதற்குமேல் தோன்றக்கூடிய சங்கையை அநுவதித்துப் பரிஹாரமும் காட்டியருளினார் (பிள்ளை லோகாசார்யர்);

> "ஆனால் * நலிவானின்ன மெண்ணுகின்றாய் * ஆற்றங்கரை வாழ்மரம்போலஞ்சுகின்றேன் என்கிற பாசுரங்களுக்கு அடியென்னென்னில்; பந்தாநுஸந்தாநம். ப்ரஜை தெருவிலே யிடறித் தாய் முதுகிலே குத்துமாபோலே நிருபாதிக பந்துவாய் சக்தனாயிருக்கிறவன் விலக்காதொழிந்தால் அப்படிச் சொல்லலாமிறே. ப்ரஜையைக் கிணற்றின் கரையில் நின்றும் வாங்காதொழிந்தால் தாயே தள்ளினாளென்னக் கடவதிறே."

என்கிற சூர்ணிகைகள் அருமருந்தானவை. இவற்றின் கருத்தாவது — எம்பெருமான் படியை நினைத்து பயம் தீரவேணுமே யல்லது பயப்படுகை கூடாதென்பது சாஸ்த்ரார்த்தமானால் தத்வ வித்துக்களில் தலைவரான ஆழ்வார்கள் * உண்ணிலாவிய வைவரால் குமைதீற்றி யென்னையுன் பாதபங்கயம் நண்ணிலாவகையே நலிவானின்ன மெண்ணுகின்றாய் * *மக்கள் தோற்றக்குழி தோற்றுவிப்பாய் கொலென்று இன்னமாற்றங்கரை வாழ்மரம் போலஞ்சுகின்றேன் * என்று அருளிச்செய்த பாசுரங்களுக்குக் கதியென்ன? என்று சங்கை; அதற்குப் பரிஹாரமாவது—பேறும் இழவுமான இரண்டும் அவனாலே யென்னலாம்படி நிருபாதிகரக்ஷகனான அவனோடு தங்களுக்குண்டான ஸம்பந்தத்தினுடைய அநுஸந்தானமே அப்படியருளிச் செய்கைக்குக் காரணம். ஸம்பந்தாநுஸந்தானத்தாலே இப்படி அவன் குறையாகச் சொல்லலாமோ வென்னில்; விளையாட்டுக்காகத் தெருவிலே யோடித்திரிகின்ற ப்ரஜை, அங்கே இடறிக் கால் நொந்தவாறே அழுதுகொண்டு அகத்திலே வந்து தனக்கு இந்த வேதனை வந்தது தாயாலேயாக நினைத்து அவள் முதுகிலே குத்துமாபோலே, ஒழிக்கவொழியாத உறவுடையனாய் நலிவைத் தவிர்க்கைக்கு சக்தனுமாயிருக்கிறவன் நலிவுபடவிட்டு விலக்காதொழிந்தால் 'அவன் இவற்றையிட்டு நலிவிக்கிறான்' என்னலாமன்றோ. விலக்காத மாத்திரமே கொண்டு அவன் செய்தானென்னலாமோ வென்னில், கிணற்றின் கரையிலே ப்ரஜையிருக்கிறபடியைக் கண்ட மாதாவானவள் அப்போதே ஓடிச்சென்று கிணற்றின் கரையில் நின்றும் வாங்காவிட்டால் கிணற்றிலே ப்ரஜை விழுந்தவளவில் 'தாய் அப்போதே சென்று எடுத்தாளாகில் இந்த ஆபத்து நேருமோ? கிணற்றின் கரையிலிருப்பை இவள் இசைந்திருக்கையாலன்றோ குழந்தை விழுந்தது; ஆனபின்பு இவளன்றோ தள்ளினாள்' என்று

லோகம் சொல்லக்கூடவதன்றே. ................இதற்கு மேலும் அறிந்துகொள்ளவேண்டிய அர்த்த விசேஷங்களை ஸ்ரீவசநபூஷண தத்வ்யாக்கியானங்களில் அறிந்துகொள்வது.

இத் திருவாய்மொழியில் முன்னடிகளெல்லாம் அஞ்சிக் கதறுகிறபடியாயும், பின்னடிகளெல்லாம் அச்சந்திர எம்பெருமான் படிகளைப் பேசுகிறபடியாயும் செல்லாநின்றது. பிள்ளை திருநறையூரரையர் "இப்பாட்டுக்களில் முன்னடிகளெல்லாம் புலியின் வாயிலே அகப்பட்ட ப்ரஜை தாய்முகத்திலே விழித்துக்கொண்டு புலியின் வாயிலே கிடந்து நோவு படுமாபோலேயாயிருக்கிறது" என்று பணிப்பராம்.

எண்ணிலாப்பெரு மாயனே !—எண்ணிறந்த மிகவும் ஆச்சரியமான குணங்களையுடையவனே! என்று ஒரு நிர்வாஹம். எண்ணிறந்த செயல்களைச் செய்யவல்லதான ப்ரக்ருதியைப் பரிகரமாக வுடையவனே! என்பது மற்றொரு நிர்வாஹம். .... ....

---



கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமதுபயவே. கோமடம்

## மூத்தப்பங்கார் ஸ்வாமி

### (ஸ்ரீபெரும்பூதூர்)

ஸ்ரீபெரும்பூதூரில் பெரும் புகழ்பெற்று விளங்கின மஹான்களில் முத்தப்பங்கார்ஸ்வாமி யென்பவர் ஒருவர். இந்த ஸ்வாமி திருநாட்டுக் கெழுந்தருளி ஏறக்குறைய 50 வருஷமாகிறது. இந்த மஹான் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. எம்பார் ஜீயர் ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து உபயவேதாந்த ரஹஸ்யாதிக்ரந்தங்களை அதிகரித்தவ ரென்று கேள்வி. இவர் அவதரித்தது முதலியாண்டான் ஸன்னிதியில். பெரும்பாலும் வாழ்ந்தது ஸ்ரீபெரும்பூதூரில். இந்த ஸ்வாமியினுடைய பரிசயம் அடியேனுக்குவெகு நன்றாகவுண்டு. கர்மகாண்ட ப்ரக்ரியைகளில் இந்தமஹான் நிகரற்ற நிபுணராய் விளங்கினர். இவருடைய திருவுருவப்படத்தை ஸம்பாதிக்க நாம் வெகு நாளாக முயன்றோம். அம்முயற்சி இப்போதே ஸபலமாயிற்று. படம் உபகரித்தவர் ஸ்ரீ உ. வே. திருநீர்மலை கோமடம். ராமானுஜாசாரியர். .... .... (*)

# பெரியாழ்வாருடைய அநுபவம்

வ்யாஸபராசராதி மஹர்ஷிகளும் ஆழ்வார்களும் ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தை விசேஷமாக அநுபவித்திருந்தாலும் பெரியாழ்வாரநுபவித்த விதமாக ஒருவரும் அநுபவித்திலர். இவருடைய அநுபவம் வெகு ஆச்சரியமாக அமைந்தது. "திருவிலேனொன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வநங்கையசோதை பெற்றாளே" என்ற பெருமாள் திருமொழிப் பாசுரத்தின் படி தேவகியிழந்த அநுபவங்களையெல்லாம் யசோதைப்பிராட்டி குறையொன்றுமின்றியே அநுபவிக்கப் பெற்றாளெனினும் பெரியாழ்வாரநுபவித்தவற்றில் ஏகதேசமே யசோதை அநுபவித்தாளென்று சொல்லில் இழுக்காகாது. *வண்ணமாடங்கள் சூழ்திருக்கோட்டியூர்* என்று தொடங்கி *குழலைவென்ற குளிர்வாயினராகிச் சாது கோட்டியுட்கொள்ளப்படுவாரே* என்பதளவாக இருநூற்றறுபது பாசுரங்களினால் பெரியாழ்வாரநுபவித்திருக்கும் க்ருஷ்ணாவதார திவ்யாநுபவம் அநுபவ ரஸிகர்களின் நெஞ்சை நீர்ப்பண்டமாக உருக்க வல்லதென்பதில் தட்டுண்டோ ?

"பெரியாழ்வாரும் திருமகளாரும் கோபஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினார்கள்" என்று ஸ்ரீவசநபூஷணத்திலருளிச் செய்யப்பட்டிருப்பதில் சில குருகுலவிமுகர்கள் ஒரு ஆக்ஷேபம் சொல்லுவதுண்டு; அதாவது—'யசோதை இப்படியநுபவித்தாள், கோபிகள் இப்படியநுபவித்தார்கள்' என்று பெரியாழ்வார் சொல்லியிருக்கிறாரேயொழிய வேறில்லையே; இதனால் பெரியாழ்வார் கோபஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினதாகச் சொல்லப் பொருத்தமுண்டோ? ஸ்ரீவிஷ்ணுபுராண ஸ்ரீ பாகவதாதிகளில் கதை சொல்லியிருக்கிற விதமாகத்தானே பெரியாழ்வாரும் சொல்லியிருக்கிறார்; பராசராதிகள் கோபஜந்மத்தை ஆஸ்தானம் பண்ணினதாகச் சொல்லுவாருண்டோ? இல்லையே; அப்படியிருக்க, "எசோதை சொன்னதை விஷ்ணுசித்தனாகிய நான் சொல்லிவைத்தேன்" என்று பதிகந்தோறும் நிகமனப் பாசுரத்தில் பேசியிருக்கின்ற பெரியாழ்வார் கோபஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினாராகச் சொல்லப்படுவதற்கு என்ன பொருத்தமுள்ளது? என்று.

இதற்கு இங்குச் சுருக்கமாக ஸமாதானம் தெரிவிக்கிறோம்; கேண்மின்; பெரியாழ்வார் திருமொழியின் முதற்பாகமாகிய *வண்ணமாடங்கள் பதிகம் பெரியாழ்வார் தாமான தன்மையில் அருளிச் செய்ததேயன்றி யசோதையின் பாசுரத்தை அநுவதித்து அருளிச்செய்ததன்று என்பது அத்திருமொழியின் அமைப்பினாலும் முடிவு பாசுரத்தினாலும் வ்யக்தமாக விளங்கும்; *செந்நெலார்வயல் சூழ்திருக் கோட்டியூர், மன்னுநாரணன் நம்பி பிறந்தமை, மன்னுநூல் விட்டுசித்தன் விரித்த, இப்பன்னுபாடல் வல்லார்க்கில்லை பாவமே* என்ற (அப்பதிகத்தின்) நிகமனப் பாசுரம் காண்க. இங்ஙனே தாமான தன்மையில் நின்று பேசுமிப் பதிகத்தில் ஒன்பதாவது பாசுரம் எவ்வாறு அமைந்துளதென்று பார்க்கவேணும்; *கிடக்கில் தொட்டில் கிழியவுதைத்திடும், எடுத்துக்கொள்ளில் மருங்கையிறுத்திடும், ஒடுக்கிப்புல்கில் உதரத்தே பாய்ந்திடும், மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் நங்காய்* என்றன்றோ அப்பாசுரமுள்ளது. இப்பாசுரம் பேசும்போது ஆழ்வார் தாமே யசோதையாக மாறிவிட்டாரென்பதை இசைந்து தீரவேண்டும். இல்லையாகில் இப்பாட்டு அந்வயிக்க மாட்டாதன்றோ. "இப்படி யசோதை மெலிந்து மொழிந்தாள்" என்று இப்பதிகத்தில் சிறிதும் காட்டப்பட

வில்லையே. ஆகவே குருகுலவிமுகர்களின் ஆக்ஷேபம் அஸங்கத மென்று முடிந்தது. இது நிற்க.

இப்பெரியாழ்வார் திருமொழியில் மூன்றும்பத்தின் முதற்பதிகம் *தன்னேராயிரம் பிள்ளைகளோடு* என்று தொடங்குவது. இப்பதிகத்தில் ஒவ்வொரு பாசுரமும் *உனக் கஞ்சுவன் அம்மம் தரவே* என்று முடிகின்றது. யசோதைப்பிராட்டி கண்ணனுக்கு முலைப்பால் கொடுக்க அஞ்சுவதாகச் சொன்ன அவளுடைய பாவனை கொண்டு சொன்ன பதிக மிது. இதுவரையில் கண்ணனை ஸாதாரணக் குழந்தையாகவே நினைத்திருந்ததனால் முலைப்பால் கொடுத்து வந்ததாகவும், இப்போது பூதநாவதம், சகடாஸுரபங்கம், யமளார்ஜுநபங்கம் முதலான அதிமாநுஷசேஷ்டிதங்களைக் கண்டதனால் அன்னவனுக்கு முலைப்பால் கொடுக்க அஞ்சுவதாகவும் இப்பதிகத்தில் சொல்லப்படுகிறது. இதனால் கண்ணன் முலைப்பாலுண்ணும் பருவத்தில் இது சொல்லப்படுவதாக நன்கு விளங்கிற்று.

இத்தகையதான இப்பதிகத்தில் சில பாசுரங்களில் கண்ணபிரானுடைய ஜார சோர சேஷ்டிதங்களும் அனுபவிக்கப்படுகின்றன : இரண்டாம் பாட்டுக் காண்மின்; *பொன்போல் மஞ்சனமாட்டி அமுதூட்டிப் போனேன் வருமளவிப்பால், வன்பாரச் சகடமிறச் சாடி* என்று சகடபங்கம் செய்தவாற்றைச் சொல்லி, உடனே *வடக்கிலகம் புக்கிருந்து மின்போல் நுண் ணிடையாளொருகன்னியை வேற்றுருவஞ் செய்துவைத்த அன்பாவுன்னை யறிந்துகொண் டேன் உனக்கஞ்சுவன் அம்மந்தரவே* என்றுள்ளது. மேல் நான்காம் பாட்டில், *மையார்கண் மடவாச்சியர் மக்களை மையன்மை செய்தவர் பின்போய், கொய்யார் பூந்துகில் பற்றித் தனி நின்று குற்றம் பல பல செய்தாய்* என்றும், மேல் ஆறும் பாட்டில் *சுரும்பார் மென்குழல் கன்னி யொருத்திக்குச் சூழ்வலை வைத்துத் திரியும் அரம்பாவுன்னை யறிந்து கொண்டேன் உனக்கஞ்சுவன் அம்மந்தரவே* என்றும், மேல் ஏழாம் பாட்டில் *மருட்டார் மென்குழல் கொண்டு பொழில்புக்கு வாய்வைத்து அவ்வாயர் தம்பாடி, சுருட்டார்மென்குழல் கன்னியர் வந்துன்னைச் சுற்றுந்தொழ நின்றசோதீ* என்றும், மேல் எட்டாம்பாட்டில் *பிறர் மக்களை மையன்மை செய்து தோளாவிட்டவரோடு திளைத்து நீ சொல்லப்படாதன செய்தாய்* என் றும். மேல் *நீ ஆய்ப்பாடியிளங்கன்னிமார்களை நேர்படவே கொண்டுபோதி* என்றும், *தொத்தார் பூங்குழல் கன்னி யொருத்தியைச் சோலைத் தடங் கொண்டுபுக்கு முத்தார் கொங்கை புணர்ந்து இரா நாழிகை மூவேழு சென்றபின் வந்தாய்* என்றும் இப்படிக் கண்ண னுடைய ஜார சேஷ்டிதங்கள் மிக மிகப் பேசப்பட்டிருக்கின்றன. முலையுண்ணும் பருவத்தில் இவ்வகையான சேஷ்டிதங்கள் ஸம்பாவித மன்றே; பருவத்திற்கு அஸம்பாவிதமான விஷயங் களைச் சொல்லி யநுபவிக்கலாமோ ? என்று சங்கிக்க நேர்கின்றது.

இதற்கு நாம் சொல்லக்கூடிய பரிஹாரமாவது—இங்குச் சொல்லப்படுகிற ஜாரக்ருத் யங்கள் அப்பருவத்திலே நடந்தவை யென்றே கொள்ளவேண்டிய அவசியம் சிறிதுமில்லை. யசோதையின் பாவனையிற் பேசுகிற ஆழ்வார் மிகவும் பிற்பட்டவராதலாலும், யௌவன பரு வத்திற் செய்த செயல்களும் அவருடைய அநுஸந்தானத்திற்குக் கோசரமா யிருப்பதனாலும் அந்தச் சரிதைகளையும் தாம் கூட்டிக்கொண்டு அருளிச் செய்கிறாரென்றே கொள்ளவேணும். வஸுதேவர் திருமாளிகையில் நின்றும் திருவாய்ப்பாடிக்கு வந்து சேர்ந்த கண்ணபிரானது பாதாதிகேசாந்த திவ்யாவயவ ஸௌந்தர்யங்களை அயலகத்துப் பெண்களுக்குக் காட்டுகின்ற யசோதைப் பிராட்டி "உழந்தாள் நறுநெய் ஒரோதடாவுண்ண, இழந்தாளெரிவினால் ஈர்த்தெ ழின்மத்தின், பழந்தாம்பாலோச்சப் பயத்தால் தவழ்ந்தான் முழந்தாளிருந்தவாகாணீரே"

என்றும் "பிறங்கிய பேய்ச்சிமுலை சுவைத்துண்டிட்டு, உறங்குவான்போலே கிடந்தவிப்பிள்ளை-குறங்குகளை வந்து காணீரே" என்றும் சொல்லியிருப்பதெல்லாம் அப்போது ஸம்பாவிதமன்றிக்கேயிருக்கச் செய்தேயும் பவிஷ்யத்கதாநுஸந்தானம் ஆழ்வார்க்கு உள்ளதாகையாலே பொருந்துமென்று நிர்வஹிக்கப்படுவது போலவே இதுவும் நிர்வஹிக்கக் குறையில்லை யென்று கண்டு கொள்வது. ... ... .... *

---

# ரஹஸ்யார்த்த விசேஷம்

ஸித்தோபாய வரணத்தைக் கூறுமதான த்வய ரஹஸ்யத்தைப்பற்றி இங்குச் சிறிது பேசுவோம்; இந்த ரஹஸ்யத்திற்கு அதிகாரிகள் கிடைப்பது அரிது. ஆகிஞ்சந்யமும் அநந்ய கதித்வமுமாகிற இரண்டுமுடையவனே த்வயாதிகாரியாவான். ஆகிஞ்சந்யமாவது—*நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்* என்கிறபடியே ஒருவிதமான கைம்முதலுமில்லாமை. அநந்யகதித்வமாவது—*புகலொன்றில்லாவடியேன்* *களைகண் மற்றிலேன்*என்கிறபடியே வேறு ரக்ஷகனை நெஞ்சிலும் நினையாமை. ஆக இவ்விரண்டும் வாய்க்கப்பெற்ற அதிகாரியே த்வயாதிகாரியாவான்,

இரண்டு கூறாக [கண்டங்களாக] இருக்கின்ற த்வயத்தில் முதற்கண்டத்தினால்—பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகப்பற்றி எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது. [ஸ்ரீமத் என்பதனால் பெரிய பிராட்டியாரை முன்னிடுகிறது; நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே என்பதனால் எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது.] உத்தர கண்டத்தாலே, பெரிய பிராட்டியாரும் அவனுமான சேர்த்தியிலே கைங்கரியம் பண்ணவேணுமென்கிற ப்ரார்த்தனை காட்டப்படுகிறது. ஸ்ரீமதே என்று பிராட்டியுமவனுமான சேர்த்தி; நாராயண பதத்தின் மேலுள்ள சதுர்த்தி கைங்கர்ய ப்ரார்த்தனையைக் காட்டும். நமஸ்ஸு கைங்கர்ய விரோதி நிவ்ருத்தியைக் காட்டும்.]

ஸ்ரீ என்கிற சொல்லுக்கு ஸம்பத்து முதலியவைகளும் பொருளானாலும் இங்கே இச்சொல் பெரிய பிராட்டியார்க்குத் திருநாமமாயிரா நின்றது. *ஸ்ரீரிதி ப்ரதமம் நாம லக்ஷ்ம்யா:* என்கிற ப்ரமாண வசனமும் இங்கே அநுஸந்தேயம்.

இந்த ஸ்ரீ சப்தமானது, *ச்ரீஞ்—ஸேவாயாம்* என்கிற தாதுவிலே இரண்டு வகையான வ்யுத்பத்தியால் நிஷ்பந்நமாகும். ஸ்ரீயதே இதி ஸ்ரீ: (இது கர்மணி வ்யுத்பத்தி) ச்ரயதே இதி ஸ்ரீ: (இது கர்த்தரி வ்யுத்பத்தி]

கர்மணி வ்யுத்பத்தியில் எல்லாராலும் ஸேவிக்கப் படாநின்றாள் என்று பொருள் படுகின்றது. ஸகல சேதநர்கட்கும் இவளைப்பற்றியே தங்களுடைய சேஷத்வரூபமான ஸ்வரூபம் ஸித்திக்குமென்றவாறு. கர்த்தரி வ்யுத்பத்தியில் ஈச்வரனை இவள் ஸேவியா நின்றாளென்று பொருள்படுகிறது. இவள் தனக்கும் ஈச்வரனைப்பற்றித் தன்னுடைய ஸ்வரூப லாபமாயிருக்குமென்றவாறு. ஸகல சேதந விஷயத்தில் சேஷித்வத்தையும் ஈச்வர விஷயத்தில் சேஷத்வத்தையும் உடையவள் என்று ஸ்ரீ சப்தார்த்தம் தேறிற்றாயிற்று,

எம்பெருமானுக்கு உபாயத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டானுப் போலே இவளுக்கு புருஷகாரத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டு; புருஷ காரத்வமென்கிற தன்மையை நினைத்து இப்போது இவளைச் சொல்லுகிறது. உபாய வஸ்துவில் விசேஷணமாயிருக்கிற தன்மையையிட்டு இவளுக்கும் உபாயத்வமுண்டென்கிற பக்ஷம் யுக்தி யுக்தமன்றென்க.

எம்பெருமானுடைய நாராயணத்வப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்தத்தைத் தெரிந்துகொண்டு அவனை ஆச்ரயிக்கிற இச்சேதநனுக்கு இவளைப் புருஷகாரமாக முன்னிட வேண்டிய அவசியம் என்ன! என்னில்; குளிர்ந்த ஜலத்திலுங்கூடக் கொடிதான நெருப்பு கிளருமாபோலே, ஸர்வ பூத ஸுஹ்ருத்தானவன் திருவுள்ளத்திலே சேதனன் அளவுகடந்து பண்ணின அபராதமடியாகச் சீற்றம் பிறப்பதுமுண்டே; அங்ஙனே சீற்றம் பிறந்தால் அவ்வப ராதத்தைப் பொறுப்பது இப்பிராட்டிக்காக. தன்னுடைய உபதேசாதிகளாலே அச்சீற்றத்தை யாற்றி தயையை ஜநிப்பிக்கும் இவள். ஆகையாலே ஸம்பந்தவுணர்ச்சியுள்ளவனுக்கும் அபராதபயத்தாலே புருஷகாரத்தை முன்னிடுகை அவசியமே யென்க.

பிராட்டியின் புருஷகாரம் அவ்வளவு காரியம் செய்யுமோவென்னில், *அகில ஜகந் மாதரம்* என்கிறபடியே சேதநர்கட்கு இவள் மாதாவாய், அந்த ஸம்பந்தமடியாக இவர்களுடைய வருத்தம் கண்டு பொறுத்திருக்கமாட்டாதே யிருக்கிற வொரு தன்மையும், எம்பெருமானுக் குப் பத்நியாய் *பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு* என்கிறபடியே அவன் தன் வைலக்ஷண் யத்தைக்கண்டு பிச்சேறித் தன் சொற்படி நடக்கும்படி அபிமதவிஷயமாயிருக்கிற வொரு தன்மையும் உடையளாகையாலே ஒருவகையாலும் விபலமாக மாட்டாத புருஷகாரம். உலகில் புருஷகாரம் செய்பவர்களுக்கு இரண்டு தன்மைகள் வேண்டும்; எவர் விஷயத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவர் விஷயத்தில் நெஞ்சார்ந்த அன்பு இருக்கவேண்டியது ஒன்று; யாரிடத் தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவரிடத்தில் தம் வாக்கு வெற்றிபெற்றே தீரும்படியான வால்லப்யமிருக்கவேண்டியது மற்றொன்று. இவ்விரண்டும் பிராட்டியிடத்தே புஷ்கலமென்று நிரூபிக்கப்பட்டதாயிற்று.

இதெல்லாம் வாஸ்தவந்தான்; ஈச்வரனோ கேட்பாரற்ற ஸ்வதந்திரன்; அன்னவன் சேத நருடைய குற்றங்களை நிறுத்து அவற்றுக்குத் தக்கபடி தண்டனை செலுத்தியே தீர்வேன் என்று நிற்குமளவில் பிராட்டி தான் என்னசெய்ய முடியும்? என்னில்; இது இவளுடைய செய்தியறியாதார் செய்யும் ஆக்ஷேபமாகும். இவள் சிறையிலிருந்த காலத்தில் இவளைப் பத்துமாதம் இடைவிடாது படாத பாடுகளும் படுத்தின ராக்ஷஸிகளின் கொடுமையை மரத் தின்மேல் மறைந்திருந்து கண்ட அனுமான் "பெருமாள் வெற்றிபெற்ற பின்பு இவர்களைப் பார்த்துக்கொள்வோம்" என்று ஆறி யிருந்து, ராவணவதமான பின்பு ஓடிவந்து "இவ்வரக்கி களின் அபராதங்களைக் கணக்கிட்டு சித்திரவதம் பண்ண நினைத்திருக்குமெனக்கு இடமளிக்க வேணும்" என்று (பிராட்டியை நோக்கிக்) கேட்டவளவிலே, சொல்மிறுங்கனை அவ்வனு மானையுமுட்பட இவள் உபதேசத்தாலே பொறுப்பித்தாளென்பது ஸ்ரீராமாயண ப்ரஸித்தம்: அப்படிப்பட்டவிவள் *அல்லிமலர் மகள் போகமயக்குக்களாகியும் நிற்கும்மமான்* என்கிற படியே தன் போக்யதையிலே மிகவும் ஈடுபட்டிருப்பவனாய், *நின்னன்பின் வழிநின்று சிலை பிடித்தெம்பிரானேக* என்கிறபடியே 'மாயாமிருகத்தின் பின்னேபோ' என்றாலும் அதனைவ தறியாதே அதின்பின்னே தொடர்ந்து போமவனாய் இப்படி தனக்கு விதேயனாய் வழிவனா யிருக்குமவனைப் பொறுப்பிக்கவல்லளென்பது பற்றிக் கேட்கவேண்டுமோ?

'ஸ்ரீமத்' என்கிற பதத்தில் ப்ரக்ருதியான ஸ்ரீ என்பதன் பொருள் விவரிக்கப்பட்டதாயிற்று. அதன்மேல் ஏறிக்கிடக்கும் மதுப்பென்கிற ப்ரத்யயத்தின் பொருள் இனிமேல் விவரிக்கப்படுகிறது. 'எப்போதும் கூடியிருத்தல்' என்னும் பொருளில் 'மதுப்பு' வந்திருப்பதாகக்கொள்க. இத்தால் புருஷகாரபூதையான பிராட்டியும் ஈச்வரனுமான இருவருடைய சேர்த்தியும் எப்போதுமுண்டென்பது சொல்லப்பட்டதாயிற்று.

இந்த நித்ய யோகம் எப்படிப்பட்டதென்னில், ஸ்வரூபாநுபந்தித்வ ப்ரயுக்தமான நித்யயோக மென்று கொள்ளக்கடவது. ஞானம் ஆனந்தம் முதலியவை எப்படி பகவானுக்கு ஸ்வரூப நிரூபகங்களோ அப்படி ஸ்ரீபதித்வமும் நிரூபகமாகையாலே இவளோடே கூடியே ஈச்வர வஸ்துவின் ஸத்தையுளதாகக் கொள்க.

இவளுடைய குணப்ரயுக்தமாகவும் நித்யயோகமுண்டு; அபராதங்களைக் கணக்கிட்டு தண்டிக்க வல்லவனான ஈச்வரனுடைய ஸ்வாதந்தரியத்தையும் சேதனர் செய்யும் குற்றங்களின் அளவில்லாமையையுங்கண்டு 'ஐயோ என்னாகுமோ!' என்கிற பயத்தாலே ஈச்வரனை விட்டு ஒரு நொடிப்பொழுதும் அகலமாட்டாள்.

இப்படி இவளிருந்து நோக்குகையாலே, ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ரியத்தைக் கண்டோ தன்னுடைய அபராதங்களை நினைத்தோ சேதநன் அஞ்சவேண்டிய ப்ரஸக்தியில்லை.

அன்றியும், பிராட்டியானவள் எப்போதும் எம்பெருமானோடு கூடியே யிருக்கின்றாளென்று தெரிந்துகொள்ளுமளவில், எந்த ஸமயத்திலும் எம்பெருமானை ஆச்ரயிக்கலாம் என்பது தேறிற்றாகும். 'புருஷகாரம் செய்பவள்' அருகேயிருக்குங்காலம் பார்த்து ஆச்ரயிக்க வேணும்' என்று ஸமயப்ரதீக்ஷை வேண்டியதில்லை; ஆச்ரயிக்க வேணுமென்கிற ருசி பிறக்க வேண்டுவதத்தனையே.

பிராட்டியின் புருஷகாரம் அவசியம் வேண்டியதேயென்பதை விபவாவதார காலத்துச் செய்தி யாலும் தெரிந்து கொள்ளலாம்; ராமாவதாரத்தில், அளவுகடந்த அபராதத்தைச் செய்து ப்ரஹ்மாஸ்த்ரத்திற்கு இலக்காய் தலையறுப்புண்ண வேண்டின காகம் க்ருபைக்கு இலக்காய்த் தலைபெற்றுப்போனது பிராட்டியின் ஸந்நிதியினாலேயாம், அவ்வளவு அபராதியல்லாத ராவணன் ராமசரத்துக்கு இலக்காய் முடிந்துபோனது இவளுடைய ஸந்நிதியில்லாமையினாலேயாம். ஆகவே பிராட்டியின் ஸந்நிதானம் பழுதுபடாதென்று உணர்க.

---

# அற்புதமான பக்தன் கதையொன்று

மதுரைமாநகரில் ஒரு ஏழைக் குடும்பம். பரம்பரையாகவே கிருஷ்ண பக்தி குடிகொண்ட உயர்ந்த குடும்பம். தந்தையை யிழந்து தாயை மாத்திரம் தஞ்சமாகக்கொண்ட ஒரு சிறு குமாரன் செல்வனென்னும் பெயருடையான் வளர்ந்துவருகிறான். ஆறேழு வயது ஆய்விட்டது, இவனுடைய படிப்புக்கு அவ்வூரில் ஒருவிதமான ஸௌகரியமும் இல்லை; ஏனெனில் சம்பளம் கட்டியே வாசிக்கவேண்டியதாக இருந்தது. சாப்பாட்டுக்கே மிகவும் சிரமப்படும் குடும்பமாதலால் சம்பளங்கட்டி வாசிப்பிக்க சக்தியற்றவளாயிருந்தாள் தாய். ஆனாலும் படிப்பிக்க வேண்டியது மிகவும் அவசியமாக இருந்ததனால் அவ்வூர்க்கு மூன்றுமைல் தூரத்தில் ஒரு கிராமத்தில் ஒரு பெரியவர் தமது இல்லத்திலேயே பல பிள்ளைகளுக்கு இலவச

மாய் [தருமமாக] படிப்பு சொல்லித் தருகிறுரென்றறிந்த தாயானவள் குமாரனை அவ்விடம் சென்று படித்துவரும்படி கட்டளையிட்டாள்.

மூன்று மைல் தூரம் போகவேண்டியிருந்தபடியாலும் பயங்கரமான காட்டுப்பாதையாக இருந்தபடியாலும் தன்னேடு கூட அவ்விடம் வாசிக்கவரும் மாணுக்கன் வேறெருவனும் இல்லாதிருந்தபடியாலும் செல்வன் தனியாய்ச் செல்வதற்கு அஞ்சி அநுதினமும் தன்னேடு கூட ஒரு சேவகனைத் துணையாக அனுப்பும்படி தாயை வேண்டினுன். அதற்கு அவள் 'அப்பா! சம்பளமில்லாமல் சேவகன் துணைவருவானு? தினமும் உன்னேடு போகவும் வரவும் நாலைந்து ரூபாயாவது மாதச் சம்பளமில்லாமல் ஒருவனும் இசையமாட்டான்; இவ்வூரிலேயே உள்ள பள்ளிக்கூடத்தில் மாதம் ஒரு ரூபாய் சம்பளம் கட்ட முடியாமலன்றே உன்னை நான் வெளியூருக்குப் போகச் சொல்லுகிறேன்; நாலைந்து ரூபாய்க்கு நான் எங்கே போவேன்? நீ எப்படியாவது தனியாகத்தான் சென்று வாசித்து வரவேண்டும்' என்றுள்.

அப்படியே யென்று தாயை வணங்கி விடைபெற்றுக்கொண்டு புறப்பட்ட செல்வன் சிறிது தூரம் சென்று உடனே திரும்பிவந்து 'அம்மா! வழி கொடிய காடாக இருக்கின்றது; ஆடுகளும் மாடுகளும் தவிர மனிதன் ஒருவனும் தென்பட வில்லை; மிகவும் அச்சமாயிருக்கிறதே, நான் எப்படிச் செல்வேன்; என்று அழுது நின்றுன். அதற்குத் தாய் சொன்னுள்—'குழந்தாய்! அழாதே, அஞ்சாதே, உன்னுடைய அண்ணன் ராதாரமணன் என்பவன் வழியில் இருக்கிறுன்; 'அண்ணு ராதாரமணு' என்று நீ அழைக்கும்போது அவன் தவருமல் உன்னிடம் வந்து சேருவன். அவ்வூர் எல்லையில் உன்னைக் கொண்டுவிட்டு அவன் திரும்புவான். மறுபடியும் மாலைப்பொழுதில் நீ திரும்பி இவ்விடம் வரும்போது அவ்வண்ணமே அழைத்தாயாகில் வருவான்; அவனைத் துணைகொண்டு போய்வா' என்றுள். இவள் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிடத்தில் திடமான பக்திபூண்டவளாதலால் அந்த பரமாத்மாவையே அண்ணன் ராதா ரமணனென்று குறிப்பிட்டாள். ஏழைக்கு இரங்கும் அவன் நம் குழந்தைக்கு அவசியம் துணை புரிவான் என்று நம்பியே குமாரனுக்கு இங்ஙனம் கூறினள்.

தாய் சொற்படியே திரும்பி நடந்த செல்வன் காட்டினருகிற் சென்றவாறே அச்சம் தோன்ற, 'அண்ணு!' என்று உரக்க அழைத்தான். உடனே பகவான் ஒரு சிறுவனுகவந்து இவனுக்குத் துணைபுரிந்து அவ்வூரெல்லையிலே கொண்டுசேர்த்து 'தம்பீ! போய்வருகிறேன்' என்று திரும்பிமறைந்தான். செல்வன் வாசித்துவிட்டு மாலைப்பொழுதில் திரும்புகையில் காட்டிடம் வந்தவாறே பழையபடியே 'அண்ணு ராதாரமணு!' என்றழைக்க, முன்போலவே பகவான் வந்து துணை புரிந்தான். இப்படியே தினப்படியாய் நிகழ்ந்து வருகின்றது.

நாலாறு மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் உபாத்தியாயர் எல்லா மாணுக்கர்களுக்கும் ஒரு கட்டளையிட்டார்; அதாவது—'நாளது ரேவதீ நக்ஷத்திரத்தில் எனக்கு அறுபதாண்டு நிறைவ்விழா வருகிறது; அதற்காக நீங்களெல்லாரும் உந்தம் சக்திக்குத்தக்கபடி ஏதாவது பரிசு கொண்டு கொடுப்பது நலம்' என்றுர். ஒவ்வொரு மாணுக்கனும் வேஷ்டியும் சால்வையும் வெள்ளிப்பாத்திரங்களும் ரூபாய்களுமாகக் கொணர்ந்து கொடுத்துக் கொண்டிருக்கிறபடியைக் கண்ட செல்வன் தானும் ஏதாவது கொணர்ந்து ஸமர்ப்பித்து உபாத்தியாயரை உகப்பிக்கவேணுமென்றெண்ணித் தன் தாயிடம் செய்தியைச் சொல்லி 'அம்மா! ஏதாவது கொடு' என்று கெஞ்சிக்கேட்டான். உண்மையில் அவளிடம் ஒன்றுமில்லாமையாலே அதை உள்ளபடி சொல்லி, குழந்தாய்! நித்தியமும் நீ தனியே போகிறுயா? துணையோடு போகிறுயா?

என்று கேட்டாள்; அதற்கு அவன் 'அம்மா! என்னால் தனியாகப் போக முடியுமா? நீ சொன்னபடியே அண்ணன் ராதாரமணனை யழைக்கிறேன், அவன்தான் இரண்டு வேளையும் தவறாது வந்து துணைபுரிகின்றான்' என்று கூறினன். அது கேட்ட அவள், 'அப்படியா? இன்று போகும்போது அவனையே கேட்டுப்பார்; ஏதாவது கொடுப்பன், அதைக் கொண்டு போய் உபாத்தியாயரிடம் கொடு' என்றாள்.

அப்படியே செய்கிறேனென்று சொல்லிப் புறப்பட்ட செல்வன் வழக்கப்படியே வழியில் அண்ணனையழைக்க, அவன் வந்து தோன்றினவாறே தனது கோரிக்கையைச் சொல்லிக் கொண்டான். அதுகேட்ட ராதாரமணன் பசும்பால் நிரம்பிய ஒரு சிறு குடுவையைச் செல்வனிடம் கொடுத்து 'செல்வா! இதிலுள்ள பாலைமாத்திரம் உபாத்தியாயருக்கு ஸமர்ப்பித்துவிட்டுக் குடுவையைத் திரும்ப வாங்கி வந்து என்னிடமே கொடு' என்றுசொல்லி, துணை வந்து திரும்பிவிட்டான்.

வெறுங்கையோடு போகாமல் இதுவாவது கொண்டுபோகப் பெற்றோமேயென்று பெருங்களிப்புக் கொண்ட செல்வன் உபாத்தியாயரிடம் சென்று இதைப் பெற்றுக்கொள்ள வேணுமென்றான். பிறர் பலர் அநவதிகமாகக் கொணர்ந்து கொடுக்கும் சிறந்த பரிசுகளை ஆனந்தமாக வாங்கி வைத்துக் கொண்டிருக்கின்ற அவர் இச்சிறுவன் காட்டும் பால் குடுவையைக் கண்ணெடுத்தும் பார்க்க வில்லை. இவனோ பதைக்கிறான். பிறகு இச்செல்வனது நிர்ப்பந்தம் பொறுக்க மாட்டாத அவர் ஒரு பரிசாரகனை விளித்து இந்தப் பாலை வாங்கிச் சேர்த்துக் கொண்டு குடுவையைக் கொடுத்துவிடு என்று கட்டளை யிட்டார்.

அவன் செல்வனையழைத்துக் கொண்டுபோய் ஒரு பாத்திரத்தில் பாலைக் கொட்டிக் கொண்டு குடுவையைக்கொடுக்கையில் அதில் பால் அப்படியே யிருப்பதாகக் காண்கிறது. பல அண்டாக்கள் பாலால் நிரப்பப்பட்டு விட்டன; மேலே பாத்திர மில்லாமையினாலே அவன் மிகவும் வியந்து இவ்வதி சயத்தை உபாத்தியாயரிடம் வந்து தெரிவித்தான். அவரும் கண்டு ஆச்சர்யப்படுகிறார். விஷயம் இன்னதென்று விளங்கவில்லை! 'பையா! இந்தப்பால் எங்கிருந்து கொண்டுவந்தாய்?' என்று செல்வனையே கேட்கிறார். 'என் அண்ணன் ராதாரமணன் கொடுத்தது' என்கிறான். அண்ணனும், ராதாரமணனுமே, யாவன்? என்று விசாரிக்கையில் இவனுக்கு ஸகோதரனே கிடையாதென்று பலரும் கூறினர். பிறகு செல்வனை விரிவாக விசாரித்ததில், முதலே பிடித்து வரலாற்றைக் கூறினன் செல்வன். 'பகவானே அவன்' என்று தெரிந்துகொண்ட உபாத்தியாயர், அன்று நடைபெறவேண்டிய ஷஷ்டியப்தபூர்த்திக் கொண்டாட்டத்தில் சிறிதும் விருப்பமற்றவராய், அந்த 'அண்ணன்ராதாரமணனை' எப்படியும் காணப்பெற வேணுமென்று ஆவல் கொண்டார். 'செல்வா! உன் அண்ணனை எனக்குக் காட்டுகிறாயா?' என்றார். வழக்கம்போல் அழைத்தால் அண்ணன் வருவானென்று நினைத்து, ஆகா, அவசியம் காட்டுகிறேன் என்றான்.

இருவருமாய்ப் புறப்பட்டு வருகிறார்கள்; வழக்கமான இடத்தில்வந்து 'அண்ணா ராதாரமணா!' என்றழைக்கிறான் செல்வன். அன்று ராதாரமணன் வரவேயில்லை. எத்தனை தடவை கூவியழைத்தும் வந்திலன். செல்வன் இன்று துணையோடு வந்திருப்பதனால் நாம் வந்து துணை புரியவேண்டிய அவசியமில்லை என்று கருதினன்போலும். பக்தியற்றவரான உபாத்தியாயருக்குக் காட்சி கொடுக்கக் கருதிற்றிலன் போலும். எவ்வளவு கூவியும் அவன் வராததனால் 'மஹாபாபியான நான் இருக்கிற வரையில் உன் அண்ணன் வரமாட்டானப்பா!' என்று சொல்லிப் புலம்பிக்கொண்டே திரும்பினார் உபாத்தியாயர்.

அவர் கண்மறையச் சென்றவாறே வந்து சேர்ந்தான் ராதாரமணன். 'அண்ணா! என் உபாத்தியாயர் உன்னைக் காணவேண்டி வந்தாரே; நீ ஏன் இதுவரை வரவேயில்லை? அவர் அழுதுகொண்டே போகிறாரே! என்று சொல்லி இவனும் அழத்தொடங்கினான். இவனுடைய அபிமானத்தில் இணங்கியவர் என்ற காரணத்தினால் அவர்க்கும் காட்சி தருவோமென்றிரங்கினனெம்பெருமான். அழைத்துக் காட்சி தந்து, செல்வனையும் வித்தியாநிதியாக அநுக்ரஹித்து மறைந்தனன். ... .... ... ... *

இது ஸாதாரணமான வொரு கதையாயிருந்தாலும் இதிலிருந்து பக்தர்கள் அறியக்கூடிய் சாஸ்த்ரார்த்தங்கள் பலவுள்ளன. அவற்றை விவேகிகள் உய்த்துணரவேண்டும்.

# ஸ்ரீ ராமாயண விசேஷார்த்தமொன்று

அசோகவனத்திலிருந்த பிராட்டி திருவடிமூலமாகப் பெருமாளுக்குச் செய்தி சொல்லி யனுப்பினள். அதைப்பெருமாளிடம் விண்ணப்பம் செய்யாநின்ற திருவடி, *ஜீவிதம் தாரயிஷ்யாமி மாஸம் தசரதாத்மஜ* என்று சொன்னதையும் விண்ணப்பஞ் செய்தான். 'இனி ஒருமாத மளவுந்தான் ஜீவித்திருப்பேன், அதற்குமேல் ஜீவித்திருக்கமுடியாது' என்று பிராட்டிசொன்ன வார்த்தை. இப்படி சொல்லக்கேட்ட பெருமாள் "அப்படியா? என்னைப் பிரிந்த பிராட்டி இன்னமும் ஒரு மாதம் வரை ஜீவித்திருப்பளா? அப்படி ஒருமாதம் ஜீவித்திருந்தாளாகில் நீடுழிகாலமும் ஜீவித்திருக்க வல்லவளே. என்னல் அப்படி ஜீவித்திருக்க முடியாது; *ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணும்* குவளையங்கண்ணியான அப்பிராட்டியை விட்டு ஒரு நொடிப் பொழுதும் ஜீவிக்ககில்லேன் நான்" என்று கூறியிருக்கிறார். இவ்விரண்டு வார்த்தைகளையும் சேர்த்து ஆராயு மிடத்து விச்லேஷத்தில் தரியாமையென்னும் விஷயத்தில் பிராட்டிக்குத் தாழ்வும் பெருமாளுக்கு ஏற்றமும் ஏற்படுகிறதல்லவா? இது கூடுமோ?*அகலகில்லேனிறையு மென்றலர்மேல்மங்கையுறைமார்பா* என்று ஆழ்வாரருளிச் செய்தபடி ஒரு நொடிப்பொழுதும் அகல கில்லேனென்று சொல்லுமவள் பிராட்டியல்லவா? அப்படிப்பட்டவளன்றோ' ந ஜீவேயம் க்ஷணமபி' என்று சொல்லுமவள்பிராட்டியல்லவா? அப்படிப்பட்டவளன்றோ 'ந ஜீவேயம் க்ஷணமபி' என்று சொல்லவேண்டும். அவள் ஊர்த்வம் மாஸாத் நஜீவேயம் என்று ஒரு மாதம் விச்லேஷத்தை ஆற்றியிருக்க முடியுமென்பதும் 'ந ஜீவேயம் க்ஷணமபி' என்று க்ஷணகாலமும் பிரிவாற்றகில்லேனென்று பெருமாள் சொல்லுவதுமாக வான்மீகி முனிவர் வசநவிந்யாஸம் செய்திருப்பது நன்றாயில்லையே யென்று முற்காலத்தில் சிலர் பேசிக்கொண்டார்களாம்; அப்பேச்சு நம்பிள்ளை திருச்செவியில் விழுந்து வெகு அற்புதமான பரமார்த்தம் வெளியிடலாயிற்று.

மேலே யெடுத்துக்காட்டிய திவ்ய தம்பதிகளின் வசனங்களை ஆழ்ந்து நோக்குமிடத்துப் பிராட்டிக்கே பெருமை விளங்கும். எங்ஙனே யென்னில்; பிராட்டியின் திருமேனி யழகைக் காட்டிலும் பெருமாள் திருமேனியழகு மிகவும் குறைந்ததென்பது இங்குத் தெரிய வருகிறது. பிராட்டியின் திருமேனியழகெல்லாம் ஒரு தட்டாய் கண்ணழகு மாத்திரமே ஒரு தட்டாயிருக்கையினாலும், அதுதானும் *பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரி யென்று பேர் பெற்ற இராமபிரானது ஸௌந்தரியத்திற்காட்டிலும் வீறு பெற்றிருக்கையாலும் அப்படிப் பட்ட பிராட்டியின் க்ஷணகாலவிச்லேஷமும் அஸஹ்யமென்பது பெருமாளுடைய திருமுகப் பாசுரத்தினால் [விநா தாம் அஸிதேக்ஷணும் என்பதனால்] வெளிவந்து பிராட்டியின் பெருமையை நிலைநாட்டி நின்றது. ஒரு மாஸம் பிரிவாற்றியிருப்பேனென்ற பிராட்டியின் வார்த்தை இதற்குப் பிரதிகோடியாய் பெருமாளைப் பிரிந்து ஒரு மாதம் ஜீவித்திருக்க முடியுமென்று சொன்ன முகத்தால் பெருமாளுடைய வடிவழகு அவ்வளவு சிறந்ததன்றென்பது காட்டிற்றாகிறது.

இவ்வர்த்தம் எவ்விடத்தில் வெளியிடப்பட்டிருக்கிற தென்னில்; திருவாய்மொழி (6-6-6.) *என் விற்புருவக்கொடி தோற்றது மெய்யே* என்றவிடத்து ஈட்டில்.

"ஊர்த்வம்மாஸாத் †ந ஜீவிஷ்யே என்னப்பண்ணும் வடிவைக்காட்டி
*ந ஜீவேயம்க்ஷணமபி* என்னப்பண்ணும் வடிவைக்கிடீர் கொண்டது."

என்றுள்ள ஸ்ரீஸூக்தியின் சுவைமிகுதி காண்க. 'அழகில் குறைந்த வடிவைக் காட்டி அழகில் நிறைந்த வடிவைக் கொள்ளை கொண்டானே!' என்பது தான் இங்குப் பரம தாற்பரியம். .... .... .... ... .... *

† நஜீவிஷ்யே, நஜீவேயம் என்பன பாட பேதங்கள்.

| | | | |
|---|---|---|---|
| மெல்லியர்கள் கை கழங்கு ஆம் வேங்கடம் | பெண்கள் கையிற் கொண்டு ஆடும் கழற்காய் போன்றிருக்கப்பெற்ற திருவேங்கடமானது, | பார்த்தனுக்கு | அர்ஜுனனுக்கு |
| பண்டு | முன்பு [கிருஷ்ணாவதாரத்தில்] | தத்துவம் நூல் | தத்துவ சாஸ்திரமாகிய கீதையை |
| மல்லினரை | மற்போர் வீரர்களை | விண்டு அறைந்த | வெளியிட்டுக் கூறியருளிய |
| அறைந்த | தாக்கி யழித்த | அன்பு உடையார் | அன்பை யுடையவருமாகிய திருமாலினது |
| வன்பு உடையார் | வலிமை கெடாதவரும் | வெற்பு | திருமலையாம். |

**** மகளிரது சிவந்த கை செங்காந்தள் மலர்க்கும், திரண்டுருண்ட கழற்சிக் காய் வண்டுக்கும், மகளிர் கைகளிற் கொண்டு ஆடும்போது அக்காய்கள் அக் கைகளின் மேல் எழுந்தெழுந்து ஆடி மீண்டும் அவற்றில் விழுதல் - காந்தள் மலரின் மேல் வண்டு விழுந்து எழுந்தெழுந்து மொய்ப்பதற்கும் உவமை; வடிவும் தொழிலும் பற்றியது. ஆம் - உவமவுருபு. மெல்லியர் - மென்மையானதன்மை யுடையவரென்று மாதர்கட்கு இயற்கைப் பெயர். மற்போராவது ஆயுத வுதவியின்றி உடல் வலிமை கொண்டு பலவகையாகச் செய்யும் போர்.*

*பின்னடிகளில், பண்டறைந்த வன்புடையார், விண்டறைந்த வன்புடையார் என்று யமகம் வைக்கப்பட்டது. . உடையார் என்னுஞ் சொல் மூன்றாமடியில் உடையப் பெறாதவர் (அதாவது) குறையாத வலிமையுள்ளவரென்று பொருள்படும். ஈற்றடியில் உடையவரென்று பொருள் படும். இரண்டிடத்திலும் ஒரே பொருளைக் கொள்ளுதல் திரிபிலக்கணத்திற்கு ஒவ்வாது.* ... ... ... (44)

**45. காந்த ளிரவலர்போற் கையேற்பக் கொன்றைகொடை**
**வேந்தனெனப் பொன்சொரியும் வேங்கடமே—பூந்துளவின்**
**கான்மடங்கா மார்வத்தார் காண விரும்பினர்மேல்**
**நான்மடங்கா மார்வத்தார் நாடு.**

| | | | |
|---|---|---|---|
| காந்தள் | செங்காந்தள் மலர் | பூ துளவின் கான் | அழகிய திருத்துழாயின் வாசனை |
| இரவலர் போல் கை ஏற்ப | யாசகர் யாசிப்பதற்கு ஏற்கின்ற கைபோன்றிருப்ப | மடங்கா மார்வத்தார் | மாறாத திருமார்பையுடையவரும் |
| கொன்றை | கொன்றைமரம் | காண விரும்பினர்மேல் | தம்மைச் சேவிக்க விரும்பின பக்தர்களிடத்து |
| கொடை வேந்தன் என பொன் சொரியும் வேங்கடம் | வள்ளலான அரசன் (யாசகர் கையில்) பொன்னைச் சொரிவதுபோல (க் காந்தள் மலரின்மேல்) பொன்னிறமான தன் மலர்களைச் சொரியப் பெற்ற திருமலையானது. | நால் மடங்காம் ஆர்வத்தார் நாடு | பன்மடங்கு அதிகமாக வைக்கும் அன்பை யுடையவருமாகிய திருமாலின் திவ்ய தேசம். |

**** செங்காந்தள்மலர் பரம்பி யிருப்பதையும் அதன்மீது பொன்னிறமான கொன்றைமலர்கள் சொரியப்பெறுவதையும்நோக்கி, யாசகர்கையில் வள்ளல் பொன் சொரிவதாகவைத்து வருணித்தபடி. கைபோலும்மலரை கையென்றும், பொன் போலும் மலரை பொன் என்றுங்கூறியது உவமையாகுபெயர்.* **பூந்துளவின் கான் மடங்காமார்வத்தார்**—*தோளிணையிலும் தாளிணையிலும் சுடர்முடியிலும்போலத் திருமார்பிலும் திருத்துழாயணிந்திருப்பதால் அதன்பரிமளம் எப்போதும் வீசியிருக்குமென்க.* **காணவிரும்பினர்மேல் நான் மடங்காம் ஆர்வத்தார்**—*"வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற என்னையொழிய என்னின் முன்னம் பாரித்துத், தானென்னை முற்றப்பருகினன், காரொக்குங் காட்கரையப்பன் கடியனே" என்ற திருவாய்மொழியின்படி அடியவர்களின் அன்பு ஏகதேசமென்னலாம்படி அதனிலும் விஞ்சிய அன்புடையவரென்கை.* ... ... .... (45)

46. நாகத்தின் மேற்குறவர் நன்கெறிந்த மாணிக்கம்
மேகத்தின் மின்புரையும் வேங்கடமே—மாகத்தில்
மாத்தாண்ட மண்டலத்தார் வாயுண் டுமிழ்ந்தளந்து
காத்தாண்ட மண்டலத்தார் காப்பு.

| | |
|---|---|
| குறவர் | குறவர்கள் |
| நாகத்தின்மேல் | யானையின் மேல் |
| நன்கு எறிந்த மாணிக்கம் | நன்ருக வீசியெறிந்த மாணிக்க ரத்தினங்கள் |
| மேகத்தின் மின் புரையும் வேங்கடம் | மேகத்தினிடத்துக் காணப்படுகிற மின்னல் போல விளங்கப் பெற்ற திருமலையானது |
| மா கத்தின் | பெரிய வானத்தில் விளங்குகின்ற |
| மாத்தாண்ட மண்டலத்தார் | ஸூரிய மண்டலத்திலெழுந்தருளியிருப்பவரும் |
| வாய் உண்டு | (யுகாந்த காலத்தில்) வாயினுலே உட்கொண்டு |
| உமிழ்ந்து | (பிரளயம் நீங்கிய பின்பு) வெளிப்படுத்தி |
| அளந்து | (திரிவிக்கிரமனுக) வியாபித்து |
| காத்து | தாமான நிலையிலே பாதுகாத்து |
| ஆண்ட | (ஸ்ரீராமாவதாரத்தில்) அரசாளப்பட்ட |
| மண் தலத்தார் காப்பு | பூமியையுடைய வருமாகிய திருமால் சேமஞ்செய்யுமிடமாம். |

**** "மதயானைபோலெழுந்த மாமுகில்காள்" என்ற நாச்சியார் திருமொழியின்படி மதயானையைக் காளமேகமாகவைத்து, செந்நிறமுடைய மாணிக்கத்தை மின்னலாகவைத்து வருணித்தது பொருத்தம். மஹாகம் என்ற வடசொல் மாகமெனத் திரிந்தது. "த்யேயஸ் ஸதா ஸவித்ருமண்டல மத்யவர்த்தீ நாராயண:" என்றபடி பகவான் ஸூர்யமண்டலஸ்தராதலால் மாகத்தின் மாத்தாண்ட மண்டலத்தார் என்ருர். "பாரிடந்து பாரையுண்டு பாருமிழ்ந்து பாரளந்து பாரையாண்ட பேராளன்" என்ற திருநெடுந்தாண்டகப் பாசுரம் நினைப்பது.* ... .... .... (46)

47. செம்பதும ராகச் சிலைசூழ் பெரும்பாந்தள்
வெம்பரிதி யூர்கோளாம் வேங்கடமே—உம்பருல
கோதத்தி னப்புறத்தா னோரா லிலைதுயின்ருன்
வேதத்தி னப்புறத்தான் வெற்பு.

| | |
|---|---|
| செம் பதுமராகம் சிலை சூழ் | செந்நிறமான பத்மராகக் கல்லைச் சுற்றிக்கொண்ட |
| பெரு பாந்தள் | பெரியதொரு மலைப்பாம்பு |
| வெம் பரிதி ஊர்கோள் ஆம் வேங்கடம் | வெவ்விய ஸூரிய மண்டலத்தைச் சுற்றிக் காணப்படும் பரிவேஷம் போன்று தோன்றப் பெற்ற திருவேங்கடமானது, |
| ஓதத்தின் அப்பு | பிரளய சமுத்திரத்தின் நீர் வெள்ளம் |
| உலகு உம்பர் உற | எல்லா வுலகங்களின் மேலும் சென்று பரவ |
| தான் ஓர் ஆல் இலை துயின்ருன் | (அப் பெருங்கடலில்) ஓராலிலையின் மேல் தான் யோக நித்திரை கொள்கின்றவனும் |
| வேதத்தின் அப்புறத்தான் வெற்பு | வேதங்களுக்கும் எட்டாதவனுமான திருமாலின் திருமலையாம். |

**** செந்தாமரைமலர்போலச் செந்நிறமுடைய கல் பதுமராகக் கல்லெனப்படும்; ரத்தினவகைகளில் இதுவொன்று. இது திருமலையில் மலிந்துகிடக்கும். இதைப் பெரியபாம்பு சுற்றிக்கொண்டுகிடப்பது இயல்வு. சிற்சிலசமயத்தில் சூரியமண்டலத்தைச் சுற்றி அருகிற் காணப்படுகிற ஊர்கோள்வட்டம் போன்றுளதாமிது.* (47)

48. கோலமணிப் பாறையிற்பாய் கோடரங்கள் செங்கதிரோன்
மேலனுமன் பாய்ந்தனைய வேங்கடமே—நாலுமறை
யாய்ந்தபர தத்துவந்தா னான் குடமாடல்
வாய்ந்தபர தத்துவந்தான் வாழ்வு.

| | | | |
|---|---|---|---|
| கோலம் மணி பாறை பாய் | அழகிய மாணிக்கப் பாறையின் மேல் பாய்கின்ற | நாலு மறை ஆய்ந்த பர தத்துவம் | நான்கு வேதங்களாலும் ஆராய்ந்து கூறப்பட்ட பரம் பொருள் |
| கோடரங்கள் | குரங்குகள் | தான் ஆனான் | தானேயானவனும் |
| செம் கதிரோன் மேல் அனுமன் பாய்ந்து அனைய வேங்கடம் | சிவந்த சூரிய மண்டலத்தின் மேல் அனுமான் பாய்ந்தாற் போலத் தோன்றப் பெற்ற திருமலையானது, | குடம் ஆடல் வாய்ந்த பர தத்து | குடமெடுத் தாடுதலாகிற கூத்திலே |
| | | உவந்தான் வாழ்வு | திருவுள்ள முகந்தவனுமாகிய திருமால் வாழுமிடமாம். |

*** வாயுபுத்திரனான அனுமான் காலையுதித்த சூரியனைக் கனியெனக் கருதிக் கவர்வானெழுந்து தந்தையாகிய வாயுவினுதவியினால் அச்சூரிய மண்டலத்தின்மீது பாய்ந்தனனென்பது புராணவரலாறு. செந்நிறமான மாணிக்கப் பாறையின்மேற் பாயுங்குரங்குகட்கு—செந்நிறமாக விளங்கும் ஸூர்யமண்டலத்தின் மீதுபாய்ந்த தெய்வக்குரங்கு உவமை கூறப்பட்டது. [நாலுமறையாய்ந்த பரதத்துவம் தானானான்] கீழ்ச் செய்யுளில் "வேதத்தினப்புறத்தான்" என்று சொல்லிவைத்து இங்கே இங்ஙனம் சொல்லலாமோவென்று சங்கிக்கவேண்டா; இரண்டுமுள்ளதே. குடமாடல் வாய்ந்த பரதம்—குடக்கூத்து. "குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாட வல்லகோ." ... .... .... ... ... .... (48)

49. கொம்பினிறால் வாங்கநிமிர் குஞ்சரக்கை யம்புலிமேல்
வெம்பியெழுங் கோளரவாம் வேங்கடமே—தும்பிபல
போர்காது மீர்ந்தார் புனையரக்கி மூக்கினெடு
வார்காது மீர்ந்தார் வரை.

| | | | |
|---|---|---|---|
| கொம்பின் இறால் | மரக் கொம்பில் கட்டிய தேன் கூட்டை | தும்பி பல போர் காதும் | பல வண்டுகள் நெருங்கி மொய்த்து ஒன்றோடொன்று தாக்கப்பெற்ற |
| வாங்க | எடுப்பதற்கு | | |
| நிமிர் | உயரத் தூக்கிய | ஈர் தார் | தேனினாற் குளிர்ந்த மலர் மாலையை |
| குஞ்சரம் கை | யானையின் துதிக்கை | | |
| அம்புலி மேல் வெம்பி எழும் கோள் அரவு ஆம் வேங்கடம் | சந்திர மண்டலத்தைப் பற்றுதற்கு அதன் மேல் கறுக்கொண்டு எழுகின்ற கரும் பாம்பு வடிவமான ராஹு போலத் தோன்றப் பெற்ற திருவேங்கடமானது | புனை | தரித்த |
| | | அரக்கி | சூர்ப்பணகையினது |
| | | மூக்கின் நெடு வார் காதும் | மூக்கையும் நீண்ட காதையும் |
| | | ஈர்ந்தார் | அறுத்தவராகிய திருமாலினது |
| | | வரை | திருமலையாம். |

*** மரக்கொம்பின் மேல் கட்டியுள்ள தேன்கூட்டைப் பறித்து உண்ணுதற்கு மலையானை தன் துதிக்கையை அதன்மேல் பரப்புவது இயல்பு. அதைப் பார்த்தால் சந்திரனைப் பிடிப்பதற்குப் பாம்பு வடிவமான ராஹுவென்னும் கிரகம் பாய்வது நினைவுக்கு வரும். தேனிறால் சந்திரனை யொத்திருக்கும்; யானைத் துதிக்கை ஸர்ப்பத்தை யொத்திருக்கும். ஸூர்ய சந்திரர்களுக்கு நேரும் கிரஹணத்தில் ராஹு கேதுக்களுக்கு ஸம்பந்தமில்லையென்று சிலர் கூறுவரேலும் நூற்கொள்கை

இதுவேயாம். ஸுதர்சந சதகத்தில் "த்ருஷ்டே அதிவ்யோம சக்ரே" என்னும் எட்டாம் சுலோகம் காணத்தக்கது. பின்னடிகளில் சூர்ப்பணகையின் அங்கபங்கமாகிற வொரு சரித்திரம் அநுபவிக்கப்படுகிறது. 'தும்பி பல போர்காதும்' என்னுமடைமொழி அரக்கிக்குமாகலாம், அரக்கி புனைந்த தாருக்குமாகலாம். மலர்களில் தேனையுண்ண பல வண்டுகள் நெருங்கி மொய்க்கும்போது ஒன்றன்மேலொன்றாக மேல் விழுமென்பது தாருக்கு அடை மொழியாகக் கொள்ளுமிடத்துப் பொருள். அரக்கிக்கு அடைமொழியாகக் கொண்டால 'பல யானைகளோடு போர் செய்யும் வலிமையுடைய' என்று பொருளாம். .... ... ... (49)

50. வண்மைதிகழ் வெண்பளிங்கு வட்டத்திற் கண்டுயின்மான்
விண்மதியின் மானேய்க்கும் வேங்கடமே—ஒண்மதியால்
நூலைத்தா மோதரனார் நோக்கவரி யார்துளவ
மாலைத்தா மோதரனார் வாழ்வு.

| | | | |
|---|---|---|---|
| வண்மை திகழ் | அழகியதாக விளங்குகின்ற | ஒள் மதியால் | சிறந்த புத்தியினால் |
| வெள் பளிங்கு வட்டத்தில் | வெண்ணிறமும் வட்டவடிவமுமுள்ள பளிங்குப் பாறையில் | நூலை தாம் ஓது அரனார் | பல நூல்களைத் தாம் ஓதிய சிவபெருமானாலும் |
| கண் துயில் மான் | படுத்துத் தூங்குகிற மானானது | நோக்க அரியார் | காண முடியாதவரும் |
| விண் மதியின் மான் ஏய்க்கும் வேங்கடம் | வானத்துச் சந்திர மண்டலத்தினிடையிற் காணப்படுகிற மான் வடிவத்தை யொத்திருக்கப் பெற்ற திருமலையானது, | துளவம் மாலை | திருத்துழாய் மாலையை யணிந்த |
| | | தாமோதரனார் | தாமோதரனென்னுந் திருநாமமுடைய வருமான திருமால் |
| | | வாழ்வு | வாழுமிடம். |

*** திருமலையில் வெள்ளைப் பாறையில் மான் படுத்திருப்பது இயல்பு. இதற்கு, சந்திர மண்டலத்தினிடையிலுள்ள மானை உவமை கூறினர். பளிங்கு வட்டத்திற்குச் சந்திரமண்டலம் உவமையாயிற்று. இந்த மானுக்கு அந்த மான் உவமையாயிற்று. மூன்றாமடியிலும் ஈற்றடியிலும் 'தாமோதரனார்' என்பது யமகமாய் நின்றது; 'தாம் ஓது அரனார்' என்று மூன்றாமடியிற் பிரியும். தாமோதரனார் என்று ஒரே சொல் வடிவமாயிருக்கும் ஈற்றடியில். ... ... ... ... .... (50)

51. காதலிற்றுச் சார்தவர்க்குங் காமியத்தைச் சார்ந்தவர்க்கும்
வேதனைக்கூற் றைத்தவிர்க்கும் வேங்கடமே—போதகத்தை
மோதி மருப்பொசித்தார் முன்பதினா றாயிரவர்
ஓதி மருப்பொசித்தா ரூர்.

| | | | |
|---|---|---|---|
| காதல் இற்று சார் தவர்க்கு | பிரபஞ்ச வாழ்வில் ஆசையொழிந்து தன்னிடம் வந்து சேர்ந்த முனிவர்களுக்கு | வேதனை கூற்றை தவிர்க்கும் வேங்கடம் | வேதனைகளின் வகைகளையொழிக்கின்றது வேங்கடம். |
| | | | (இத்தகைய திருமலையானது) |
| வேதனை கூற்றை தவிர்க்கும் | பிரமனையும் யமனையும் விலக்குகின்றது திருமலை; (அதாவது, பிறப்பையும் இறப்பையும் போக்கி முத்தியளிக்கின்ற தென்கை) | போதகத்தை மோதி மருப்பு ஒசித்தார் | குவலயா பீட மென்னும் யானையைத் தாக்கி அதன் தந்தங்களை முறித்தவரும். |
| | | முன் | முன்பு [கிருஷ்ணாவதாரத்தில்] |
| | | பதினாறாயிரவர் | பதினாறாயிரம் இளமங்கையருடைய |
| | | ஓதி | கூந்தலின் |
| | | மரு | நறுமணத்தை |
| காமியத்தை சார்ந்தவர்க்கும் | பிரபஞ்ச வாழ்வை விரும்பியவர்களுக்கும் | பொசித்தார் ஊர் | புஜித்தவருமான திருமாலினுடைய இருப்பிடம். |

* * * இப்பாட்டிலிருந்து இந்நூல் முழுதும் முன்னடிகளில் சிலேடை அமைக்கப்பட்டுள்ளது. திருவேங்கடமலையானது விரக்தர்களான முனிவர்கட்கும், காம்யார்த்திகளான ஸம்ஸாரிகளுக்கும் ஒரே வகையான காரியத்தைச் செய்கின்றதாம்; அது எதுவென்னில், வேதனைக் கூற்றைத் தவிர்த்தல்; முனிவர்களுக்கு ஜனன மரணங்களில்லாமற் செய்தல்; பிரமனுக்கு வாசகமான வேதா: என்னுஞ் சொல் வேதனென்றாகி அதன் மேல் இரண்டனுருபு ஏறி யிருக்கின்றது. கூற்று என்று யமனுக்குப் பெயர்; பிரமனையும் யமனையும் தவிர்த்தலாவது - பிரமனால் வரும் பிறப்பையும் யமனால் வரும் இறப்பையும் போக்கி மூக்தியளித்தலாம். காம்யம் என்னும் வடசொல் காமிய மெனத் திரிந்தது. அழியுந்தன்மையனவான இம்மை மறுமைப் பேறுகளுக்குக் காம்யமென்று பெயர். அப்பேறுகளை விரும்பி வந்தடைபவர்கட்கு வேதனைக் கூறுகளைத் தவிர்க்கும். வேதநா என்னும் வடசொல் வேதனை யென்று ஐயீறாகி யிருக்கின்றது. வேதனைக் கூறுகளாவன துன்ப வகைகள். ஈற்றடியில் ‘புஜித்தார்’ என்பது பொசித்தாரென்று கிடக்கிறது. முதலடியில் ‘காதலிற்று’ என்னுமிடத்தில் ‘காதலித்து’ என்கிற பாடமும் காண்கிறது; தன்னை விரும்பி யடைந்தவர்களென்று முமுக்ஷுக்களையே சொன்னபடி. .... .... (51)

52. கேள்வித் துறவோருங் கேடறவில் வாழ்வோரும்
வேள்விக் கினமாற்றும் வேங்கடமே—மூள்வித்து
முன்பா ரதமுடித்தார் மொய்வேந்தர் வந்தவிய
வன்பா ரதமுடித்தார் வாழ்வு.

| | | | |
|---|---|---|---|
| கேள்வி துறவோர் | ஞானக் கேள்வியை யுடைய துறவிகள் | முன்பு ஆ | முற்காலத்தில் |
| வேள் விக்கினம் மாற்றும் | மன்மதனால் வரும் விக்கினத்தை [இடையூற்றை] மாற்றுதற் கிடம்; (திருமலை) | ரதம் முடி தார் மொய் வேந்தர் வந்து அவிய | தேரையும் கிரீடத்தையும் மாலையையு முடைய வலிய அரசர்கள் வந்து (பொருது) இறக்கும்படி |
| கேடு அற இல் வாழ்வோரும் | தீங்கில்லாமல் இல்லறவொழுக்கத்தில் வாழ்பவர்களான க்ருஹஸ்தர்களும் | வல் பாரதம் | கொடிய பாரத யுத்தத்தை |
| வேள்விக்கு இனம் ஆற்றும் வேங்கடம் | யாகத்திற்குச் சமானமான நற்காரியங்களைச் செய்தற்கு இடமான திருமலையானது | மூள்வித்து முடித்தார் வாழ்வு | மூட்டி நிறைவேற்றியவரான திருமாலினது இருப்பிடம். |

* * * இரண்டாமடியில் “வேள்விக்கின மாற்றும்” என்ற சொல்தொடர், ‘வேள் விக்கினம் மாற்றும்’ என்றும் ‘வேள்விக்கு இனம் ஆற்றும்’ என்றும் வெவ்வேறு வகையாகப் பிரிந்து இரு பொருள்பட நின்றது. ஸன்னியாசிகளும் க்ருஹஸ்தர்களும் ஒரு நிகராகக் காரியஞ் செய்தற்கு இடமானது திருமலை யென்று சமத்காரமாகக் கூறினர். வேளாவது காமம்; அதுவாகிற இடையூற்றை மாற்றுதற்கிட மென்றது.—எக் காரணத்தாலும் காம அவாவைக் கொள்ளாதபடி வைராக்கியத்தை வளர்க்குமிட மென்கை. இல்வாழ்வோரும் வேள்விக்கு இனம் ஆற்றுமிடம்=பிரம்மயஜ்ஞ தேவயஜ்ஞ பித்ருயஜ்ஞ மநுஷ்யயஜ்ஞ பூதயஜ்ஞங்களைத் தவறாது செய்யுமிடம் திருமலை என்றவாறு.

பின்னடிகளில் ‘முன்பாரத முடித்தார்’ என்றும் ‘வன்பாரத முடித்தார்’ என்றும் யமகம் வைத்தனர். முறையே, முன்பா ரதம் முடி தார் என்றும், வல் பாரதம் முடித்தார் என்றும் பிரித்துப் பொருள் காண்க. .... .... (52)

53. பொய்யாம் வினையேனைப் போல்வாரு மன்பருஞ்செய்
மெய்யாம் வழுத்தேயும் வேங்கடமே—செய்யாள்
தனத்துவசப் பொற்புள்ளார் தானவரை மோதுஞ்
சினத்துவசப் பொற்புள்ளார் சேர்வு.

| | |
|---|---|
| பொய் ஆம் வினையேனை போல்வார் செய் | பொய் கலந்த தொழிலை யுடைய என்னைப் போன்ற நீசர்கள் செய்த |
| மெய் ஆம் வழு தேயும் | சரீர சம்பந்தத்தாலாகிய குற்றங்கள் [கருமங்கள்] நீங்குதற்கு இடமான, (திருமலை) |
| அன்பரும் | பரம பக்தர்களும் |
| செய் மெய் ஆம் வழுத்து ஏயும் வேங்கடம் | செய்கின்ற உண்மையான தோத்திரங்கள் பொருந்தப் பெற்றதான திருமலையானது, |
| செய்யாள் தனத்து வசம் | திருமகளின் திருமுலைத் தடத்திற்கு வசப்பட்ட |
| பொற்பு உள்ளார் | அழகு வாய்ந்தவரும், |
| தானவரை மோதும் சினம் துவசம் பொன் புள்ளார் | அசுரர்களைத் தாக்குகின்ற கோபத்தையுடைய த்வஜமான [கொடியான] பொன்னிறமான கருடப் பறவையையுடையவருமான திருமால் |
| சேர்வு | திருவுள்ளமுவந்து சேருமிடம். |

**** க்ருத்ரிம பக்தர்களும் பாரமார்த்திக பக்தர்களும் ஒரு நிகராக இருக்கப் பெற்ற தலம் திருவேங்கட மென்றார். எங்ஙனேயெனின்; க்ருத்ரிம பக்தர்கள், செய் மெய் ஆம் வழு தேயும்—திருமலையின் பிரபாவத்தினால் அவர்களுடைய உடற்குற்றங்க ளெல்லாம் தீர்ந்துபோகின்றன விங்கு என்க. இனி, உண்மையன்பர்கள், செய் மெய்யாம் வழுத்து ஏயும்—மனப் பூர்வமாகச் செய்யும் தோத்திரம் பொருந்தப் பெற்றிருக்குமிட மென்க.*

*பின்னடிகளில், தனத்துவசப் பொற்புள்ளார், சினத்துவசப் பொற்புள்ளார் என யமகமமைத்தனர். முறையே தனத்து வசம் பொற்பு உள்ளார் என்றும், சினம் துவசம் பொன் புள்ளார் என்றும் பிரித்துப் பொருள் காண்க.* .... (53)

54. கோடலிலா வுள்ளத்துக் கோதிலடியவரும்
வேடருமங் கைவரைவெல் வேங்கடமே—மூடர்
மனமா மனைக்கொன்றார் வன்கஞ்ச னென்னுஞ்
சினமா மனைக்கொன்றார் சேர்வு.

| | |
|---|---|
| கோடல் இலா | கோணுதலில்லாத [நேர்வழிப் பட்ட] |
| உள்ளத்து | மனத்தையுடைய |
| கோது இல் அடியவர் | குற்றமற்ற பக்தர்கள் |
| அங்கு ஐவரை வெல் | அவ்விடத்தில் பஞ்சேந்திரியங்களை வெல்லுதற்கு இடமான; (திருமலை) |
| வேடரும் | வேடர்களும் |
| அம் கை வரை வெல் வேங்கடம் | அழகிய துதிக்கையை யுடைய மலைபோன்ற யானையை வெல்லுதற்கு இடமான திருமலையானது, |
| மூடர் மனம் ஆம் மனைக்கு ஒன்றார் | மூடர்களுடைய உள்ளமாகிய வீட்டில் வந்து பொருந்தாதவரும் |
| வல் கஞ்சன் என்னும் சினம் மாமனை கொன்றார் | கொடிய கம்ஸனென்னும் கோபிஷ்டனான மாமனைக் கொன்றவருமாகிய திருமால் சேருமிடம். |

**** பரமபவித்திரமான இதயத்தை யுடையவர்களான தொண்டர்களும் சாமானியரான வேடர்களும் ஒரே வகையான காரியஞ் செய்யுமிடமாம் திருமலை. அங்கைவரைவெல்'=அங்கு ஐவரை வெல் என்றும், அம் கை வரை வெல் என்றும் பிரித்துப் பொருள் காண்க. அங்கு என்பது அசையுமாம். பின்னடிகளில், மன மாமனைக் கொன்றார், சின மாமனைக் கொன்றார் என யமகம் வைத்தனர். (மூடர்) மனம் ஆம் மனைக்கு ஒன்றார் என்றும், (கஞ்சனெனும்) சினம் மாமனை கொன்றார் என்றும் பிரித்துப் பொருள் காண்க.* ... ... ... (54)

**55.** **மொய்வதன மங்கையர்கள் முன்கையும் யோகியர்கள்**
**மெய்வயது மஞ்சுகமார் வேங்கடமே—பெய்வளையார்**
**பாற்றிருப்பா தஞ்சிவந்தார் பற்றினுர் புன்பிறப்பை**
**மாற்றிருப்பா தஞ்சிவந்தார் வாழ்வு.**

| | | | |
|---|---|---|---|
| மொய் வதனம் மங்கையர்கள் முன் கை | அழகு மிக்க முகத்தையுடைய மகளிரது முன்னங்கை | அஞ்சி வந்தார் பற்றினுர் | அச்சங்கொண்டு தம்மிடம் வந்து சரணம் பற்றினவர்களுடைய |
| அம் சுகம் ஆர் | அழகிய கிளி உட்கார்ந்திருக்கப்பெற்ற விடம் (திருமலை) | புல் பிறப்பை மாற்று | இழிவான ஜன்மத்தை நீக்குகின்ற |
| யோகியர்கள் மெய் வயதும் | யோகிகளான முனிவர்களின் உடம்பின் ஆயுளும் | | |
| அஞ்சு உகம் ஆர் வேங்கடம் | ஐந்து யுகமாகப் பொருந்தப்பெற்ற விடமான திருமலையானது, | இரு பாதம் சிவந்தார் | தமது உபய பாதங்களும் சிவந்திருக்கப் பெற்றவரான திருமால் |
| பெய் வளையார் பால் திருப்பாது | அணிந்த வளையல்களை யுடைய மகளிர் பக்கல் மனத்தைச் செலுத்தாது | வாழ்வு | வாழுமிடமாகும். |

**** திருவேங்கட மலையிலுள்ள மகளிர் கையிற் கிளியை வைத்துக்கொண்டு அதற்கு உண வூட்டி அதனேடு கொஞ்சி விளையாடுதலால் 'மொய் வதனம் மங்கையர்கள் முன்கை அம் சுகம் ஆர்' எனப்பட்டது. அங்குள்ள யோகிகள் தங்கள் யோக பலத்தினுல் நீடூழி காலம் வாழ்தலால்* '**யோகியர்கள் மெய் வயது அஞ்சு உகம் ஆர்**' *எனப்பட்டது. உகம் - யுகம். ஐந்து யுக மென்றது நீண்ட காலத்தைக் குறித்த வாறு. பின்னடிகளில் யமகம் மற்ற பாட்டுக்களிற் போலல்லாமல் இங்கு ஒரே வாக்கியமா யமைந்தது. விஷய ப்ரவணராகாமல் விஷயாந்தரங்கட்கு அஞ்சி வந்து பணிந்தவர்களான ப்ரபன்னர்களினுடைய பிறப்பை நீக்கவல்ல திருவடித் தாமரையிணையை யுடைய திருமால் வாழுமிட மென்றதாயிற்று. இருபாதம் என்னவேண்டுமிடத்து இருப்பாதம் என்றது திரிபு நயம் நோக்கி யென்க. பிறப்பை மாற்றுதல் - மீளவும் பிறக்க வேண்டாதபடி முத்தி தருதல்.* ... ... ... (5 ,)

**56.** **இல்லக் குறத்தியரும் யாக்கைநிலை வேட்டவரும்**
**மெல்லக் கிழங்கெடுக்கும் வேங்கடமே—நல்ல**
**புதுப்பூவை வண்ணத்தான் போர்முகத்துச் செவ்வாய்**
**மதுப்பூவை வண்ணத்தான் வாழ்வு.**

| | | | |
|---|---|---|---|
| இல்லம் குறத்தியர் | (தமக்கு உரிய) வீட்டில் இருக்கின்ற குறப் பெண்கள் | நல்ல புது பூவை வண்ணத்தான் | சிறந்த அப்போதலர்ந்த காயாம் பூப்போன்ற கரிய நிறத்தை யுடையவனும், |
| மெல்ல கிழங்கு எடுக்கும் | மென்று தின்னும் பொருட்டுக் கிழங்குகளைத் தோண்டி யெடுக்குமிடம் (திருமலை). | போர் முகத்து | யுத்த களத்தில் |
| யாக்கை நிலை வேட்டவரும் | உடம்பு அழிதலின்றி நெடுநாள் நிலைத்திருத்தலை விரும்பிய சித்தர்களும் | செம் வாய் மது பூ வை | சிவந்த தனது திருவாயாகிய தேனையுடைய தாமரை மலரில் வைத்து ஊதுகின்ற |
| மெல்ல கிழம் கெடுக்கும வேங்கடம் | மெதுவாக [நாளடைவில்] முதுமைப் பருவத்தை யொழிக்கப் பெற்ற விடமான திருமலையானது, | வள் நத்தான் | மேன்மையுள்ள சங்கையுடையவனுமாகிய திருமால் |
| | | வாழ்வு | வாழுமிடம். |

* * * சாமானிய ஜனங்களான குறத்திகளும், பகவானை நீண்ட காலம் தியானிப்பதற்காக தீர்க்காயுள் பெற விரும்புவாரும் திருமலையில் ஒரு நிகராயிருக்கின்றனராம்; குறத்திகள் மெல்ல (தின்பதற்கு) கிழங்கு எடுக்கின்றார்கள். நீண்ட ஆயுள் வேண்டுமவர்களும் மெல்ல கிழம் கெடுக்கும்=மெள்ள மெள்ள நாளடைவில் தங்கள் கிழத்தனத்தைப் போக்கிக்கொண்டு நித்ய யௌவன சாலிகளாகப் பெறுவர்களென்க.

பின்னடிகளில் புதுப்பூவை வண்ணத்தான், (செவ்வாய்) மதுப்பூ வை வள் நத்தான் என்று பிரிக்குமாறு யமகம் அமைக்கப்பட்டது. பூவைப்பூ - அதஸீ குஸுமம்; அதுபோன்ற நிறத்தையுடையவன் பகவான். போர் முகத்துச் செவ்வாய் மது பூ வை வள் நத்தான் - பாரதப் போரிலே பாஞ்ச ஜன்ய மென்னும் சங்கத்தைத் திருப்பவளத்திலே வைத்து ஊதினவனுமவனே. ... .... .... (5:)

57\. தேனியலுங் கூந்தலார் செங்கரமு மாதவத்தோர்
மேனியுமை யம்பொழியும் வேங்கடமே—ஞானியர்கள்
தாங்குறியெட் டக்கரத்தார் தாளுரல்மேல் வைத்துவெண்ணெய்
தாங்குறியெட் டக்கரத்தார் சார்பு.

| | | | |
|---|---|---|---|
| தேன் இயலும் கூந்தலார் செம் கரம் | (சூடிய மலர்களினின்று சொரிகின்ற) தேன் பொருந்திய கூந்தலை யுடைய பெண்களின் சிவந்த கைகள் | எட்டு அக்கரத்தார் | அஷ்டாக்ஷர மஹா மந்திரத்திற்கு உரிய வரும் |
| ஐயம பொழியும் | (இரப்பவர்க்குப்) பிச்சையிடப் பெற்ற தலம் (திருமலை); | உரல் மேல் தாள் வைத்து | உரலின்மேற் காலை வைத்து ஏறி |
| மா தவத்தோர் மேனியும் | சிறந்த தவம் புரிகின்ற முனிவர்களின் உடம்பும் | வெண்ணெய் தாங்கு உறி எட்டு | வெண்ணெய் வைத்துள்ள உறியை எட்டிப் பிடித்த |
| ஐ அம்பு ஒழியும் வேங்கடம் | (மன்மதனது) பஞ்சபாணம் பொருந்தா திருக்கப்பெற்ற தலமான திருமலையானது, | அ கரத்தார் | அழகிய கையையுடையவருமாகிய திருமால் |
| ஞானியர்கள் தாம் குறி | ஞானிகள் குறிக்கொண்டு தியானிக்கிற | சார்பு | திருவுள்ளமுவந்து சார்ந்திருக்குமிடம். |

* * * திருமலையில் வாழும் பெண்டுகளின் அழகிய கைத்தலமும் மஹாதபஸ்விகளின் உடலும் ஒரு நிகராயிருக்கப்பெற்ற தலமாம் திருமலை; எங்ஙனே யெனின்; ஐயம் பொழியும்=கைத்தலம் ஐயம் பொழியும்—ஐயமிடுவன; பிக்ஷையிடுமென்க. யோகிகளின் மேனி ஐ அம்பு ஒழியும்=காமபாண வசப்படாத தென்க. பின்னடிகளில் "தாங்குறியெட்டக்கரத்தார்" என்பது யமகமாக வைக்கப்பட்டது. ஞானியர்கள் தாம் குறிக்கொள்ளும்படியான எட்டு அக்ஷரத்தையுடையவர் திருமால்; அஷ்டாக்ஷர ப்ரதிபாத்யரென்றபடி. பின்னையும் எப்படிப்பட்டவர்? தாள் உரல்மேல் வைத்து வெண்ணெய் தாங்கு உறி எட்டு அக் கரத்தார் - திருவாய்ப்பாடியில் வெண்ணெய் களவு செய்யும்போது "பொத்த வுரலைக் கவிழ்த்து அதன் மேலேறி" என்கிற பெரியாழ்வார் திருமொழிப்படியே உரலின் மேலேறி வெண்ணெயுள்ள உறியை எட்டிப் பிடிக்கும் கையையுடையவரென்கை மூன்றாமடியில் அக்ஷரம் என்னும் வடசொல் அக்கரமெனத் திரிந்தது. ஈற்றடியில் கரம் என்பது தற்சம வடசொல். .... .... .... .... ... (57)